உ

வேலுமயிலுந்துணை.

சங்கீத பஜனை யென்கின்ற

# சுப்பிரமணியசுவாமிகீர்த்தனை

இஃது
திருத்தஞ்சமாநகரத்தைச்சார்ந்த
கருந்திட்டக்குடியிலெழுந்தருளியிருக்கும்
சிவசுப்பிரமணியக்கடவுள் திருவருள் பெற்ற

## ஆறுமுகஉபாத்தியாயரவரால்

இயற்றப்பட்டு
சங்கீதவித்துவான்

## சுந்தரராவு என்பவரால்

இராகஞ் சேர்க்கப்பட்டு
முன்பதிப்பித்தபுத்தகத்துடன்
இப்போதுசெய்தநூதனகீர்த்தனைகளும்
பாடல்களும் படமுஞ்சேர்த்தபடி

—(※)—

இஃது
சிதம்பரம்

## குருநாதசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு

நுங்கம்பாக்கம்

அருணகிரிமுதலியார்

அவர்களது
அம்பாள்விலாசஅச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

௧௮௮௯ வரு 1889







உ

சிவமயம்

வேலுமயிலுந்துணை.

## கீர்த்தனைகளின்வரலாறு.



கலியுகம் ௪௯௮௨, சாலிவாகனசகம் ௧௮௦௩. இதிற் சொல்லாநின்றபிலவவருஷசித்திரைமீ தஞ்சைநகரத்தைச்சார்ந்தகருந்திட்டக்குடியிலிருக்கும ஆறுமுகஉபாத்தியாயரென் பவருக்குக் கொடியவியாதியொன்றுசம்பவித்திருந்தமையால்அதுநீங்கும்பொருட்டுபலஔஷதங்களைச்சாப்பிட்டும்அந்நோய்நீங்காமல் துன்பம்படுத்திவருகையிலொருபெரியவர்கண்டுசுப்பிரமணியர்உபாசனைசெய்துவந்தால்வியாதியுனக்குநீங்குமென்றுசொன்னார் அப்பொழுதே அவ்வூரில்சருகூலநாதர்கோவிலில்மேற்குக்கோபுரவாயிலில்எழுந்தருளியிருக்கும தண்டபாணிகடவுள்சந்நிதிக்குப்போய்த்தரிசனம்உபாசனைமுதலானவையுஞ்செய்துகொண்டுவருகின்றகாலத்தில்ஒருநாளிரவில்வந்து கனவிலோர்துறவிபோல்வந்துநமயிடபேரால்நீகீர்த்தனம்பாடுவையானால்இவ்வியாதிநீங்குமென்றுதிருவாய்மலர்ந்தருளினார் அப்போது அவர்விழிப்புற்றுஇக்கனவில்வந்தடைந்தவர்முருகக்கடவுளென்றறிந்து தனக்குச்சங்கீதமுதலானதுந்தெரியாமலிருந்ததால்சிலநாட்சென்றுகீர்த்தனம் பாடக் கருத்துவந்துமுதல் (மனதென்றன்மீதில்வைத்தையா கிருபைசெய்யமயிலேறிவாருமுத்தையா) என்கிறகீர்த்தனத்தைப் பாடினார் பின்புசங்கீதத்திற்சமர்த்தரானசங்கராவென்பவர்வந்து தனிடம்சேரப்பின்புபலகீர்த்தனமும்வேலாயுதக்கண்ணியும்வேறுசிலபாடல்களும்பாடிப்பாடியகீர்த்தனமுழுவதும அச்சங்கராவென்பவரால் பாடம்பண்ணிஅக்கடவுள்சந்நிதியில்பலவித்துவான்களோடுங்கூடிப்பாடிஅரங்கேற்றுவித்தார்உடனேதனது வியாதிநீங்கிச்சுகமுற்றனர் அன்றுமுதல்வருஷப்பிறப்பிலும்வளர்பிறைச்சஷ்டியிலும அக்கடவுள்ஆராதனைதிருப்பணிதிருவாபரணம்முதலானதுஞ்செய்துவைத்து நாளதுவரையிலும்நடாத்திவருகிறார் அக்கடவுளும அவரிடங் கனவுமூலமாய் அனேகம் அற்புதங்களைச் சொல்லியுஞ்சிலருக்குந் தீராப்பிணிமுதலிய துன்பங்களைநீக்கியு மவரவர்மனோரதம் நிறைவேறும்படி விளங்கிக்கொண்டிருக்கிறார் மேலும் உபாத்தியாயரும் அக்கடவுளினுடைய உபயசரணங்களைப்பத்தி விசுவாசத்துட னிடைவிடாமல் தியானித்துக்கொண்டு வருகிறார்.

வரலாறு-முற்றிற்று.



புகழ்பெற்றதஞ்சைமாநகரத்துளோர்செய்த
புண்ணியவசத்தினாலே
புலவர்கண்மகிழ்ந்துணியபுதியமுதமென்னவும்
பூவுலகெல்லாம்புகழவும்
அகமகிழ்ந்தாறுமுகநாவலனியற்றிய
வற்புதக்கந்தர்பசனமே
அதுதினமுமனமகிழச்செயுமப்பத்தர்க்கெலா
மருட்செல்வமீவதென்று
சகனமுகடியர்கிளற்கக்கமலைவாழுமெய்க்
கடவுளருக்கருணைகூர்ந்து
கன்னிகுறமாதுதெய்வானையொடுமேவியிலகு
சரக்கனைநகர்மேவினனே

---

தஞ்சைக்கருக்கிட்டங்குடி

ம,ள,ள,ஸ்ரீ,நாலுகவிப்பெருமாள்

இராமசாமி ஐயங்காரவர்களியற்றிய

கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

சீர்மேவுதஞ்சைமாநகர்சாரங்கைப்பதி
சிறந்துவாழ்குமரகுருவை
சிந்தையிலுகந்தனுதினம்புகழுவர்தனது
சிறுமையுறுதுயர்தீரவும்
பார்மேவுபத்தர்களினுத்தமகுணநீதிப்
படிவந்தவேளாளர்குலமாம்
பாவலருக்கிடும்ஆறுமுகநாவலன்
பாடுமிக்கந்தர்பசனம்
பேர்மேவிகொச்சகப்பாமுதற்கவிகளின்
பிரிவுகளையாய்ந்துநன்காய்
பெருவதிலகந்தனிலுணருபப்பெயர்களே
பேசரும்பிணிதீர்ந்து
ஏர்மேவுமுப்பத்துமுக்கோடிதேவர்க
ளிறைஞ்சிடுங்கந்தனுடன்
எழின்மிகும்பதமணுகிவாழ்ந்திருப்பாரென
வியம்புவாருலகினோரே.

உ

சிவமயம்

வேலுமயிலுந்துணை.

---

கந்தர்பஜனையென்கிற

# சிவசுப்பிரமணியசுவாமிகீர்த்தனைகள்

---

நூற்பயன்

கலிப்பா

தெண்டாயுதன்றனையென்பார்க்கெல்லாந்திருவருட்செல்வமாம்
தெண்டாயுதன்றனையென்பார்க்கெலாமுளதீவினைபோம்
தெண்டாயுதன்றனையென்பார்க்கெலாந்தீர்க்காயுளுண்டாம்
தெண்டாயுதன்றனையென்பார்க்கெலாமுத்திசித்திக்குமே

காப்பு-வெண்பா

சீர்பெற்றதஞ்சைநகர்சேர்ரக்கையம்பதிவாழ்
ஏர்பெற்றசண்முகனையான்றுதிக்க பேர்பெற்ற
சொல்லின்பமும்பொருளுந்தோன்றவெனக்கருள்வாய்
வல்லபைதன்றுபகனேவந்து

அவையடக்கம்

நேரிசைவெண்பா

கல்லாருநேருந்தங்கவியைமணமகிழ்ந்து
எல்லாருங்கேட்பரினிதாகநல்லோர்கள்
பெற்றபிள்ளைதன்னிடத்திற்பேசுஞ்சிறுமொழியின்
குற்றமதைக்கொள்ளார்கள்கொண்டு

## கணபதிதுதி

### விருத்தம்

தஞ்சைமாநகரைச்சார்ந்தருள்வளர்சரக்கையூரிற்
றஞ்சமென்றவரைக்காக்கத்தனிமுகலெனவுஞ்சந்த
தஞ்சசிகங்கைகொன்றைச்சடையான்சேயெனுந்தேவே
தஞ்சொலவந்தகொந்திதந்திமாமுகனென்காப்பே

### விநாயக கீர்த்தனம்

இராகம், சௌராட்டம், ஆதிதாளம்

பல்லவி

ஆகுவாகனமீதில்விளங்கியவைங்கரனேசரணம் ஜ. ஜப
ஆகுவாகனமீதில்விளங்கியவைங்கரனேசரணம்

அநுபல்லவி

பாகுஅவல்கடலைபழமமுதுசெய்யும்
பாசாங்குசதரனேபணிந்தேன்குகன்புகழ்க்கு ஆகு

சரணங்கள்

சக்திகணபதியேசித்திகருவிதியே
சித்தியமுருகர்பதம்பற்றிப்பணியவருள் ஆகு
எத்திசையும்புகழுமத்திமுகனேயென்றன்
சித்தமிசையிருந்துதித்திகவாக்கருளும் ஆகு
தண்டசிலம்புகாலிற்கொண்டிலங்குங்கனே
கண்டுமனமகிழ்ந்துகொண்டன்யான்றுதிசெய்ய ஆகு
அண்டர்பயங்கெடவேசண்டைசெய்தசுரரை
பண்டுகொய்கருளுந்தண்டபாணியைப்போற்ற ஆகு
தஞ்மென்றேயுனதஞ்சமலர்ப்பதத்தை
நெஞ்சினினினைந்திடவஞ்சலெனவருளும் ஆகு
கொஞ்சுங்கிளிமொழியாள்வஞ்சிதெய்வானைவள்ளி
ரஞ்சிதமாய்ப்புகழுஞ்செஞ்சரணைவாழ்த்த ஆகு

### சிவசுப்பிரமணியர்கீர்த்தனம்

இ-ம் பைரவி-ஏகதாளம்

பல்லவி

மனதென்றன்மீதில்வைத்தையா-கிருபைசெய்ய
மயிலேறிவாரு முத்தையா

அநுபல்லவி

கனமருவியகந்தைகர்த்தையம்பதிவாழும்
கருகூலரகுலியகருணைவாரிதியேயென் மன

சரணங்கள்

ஸுரர்மகிழ்க்கிரிஞ்சமிகுதியே வேலா
சருவசிவகுமாரசத்திகரனெக்கு சீலா
வெங்கள்குலதேவதேவேசாக்கசேவை கோலா
எகடராபரமாயிருக்குள்ளு கூலா மன

நிருகரமதிலும்பர்சேனையுடனே சென்று
தெஞ்சமஞ்சாதசூரான்றனையுமெதிர்த்து வென்று
அருமறைப்பொருளுக்கப்பாலுகபாலசய் நின்று
அடிமையின்பமுறமேயனுக்கிரகஞ்செய்யு மின்று மன

தேவர்சேனுபதியேதிவ்யகமல பாதா
தெய்வானைமகிழ்வைபோலிலாவி ஜோதா
ஆவலைவைக்கும்பீதலர்பகபத நீதா
ஆறுமுகன்சொல்தமிழ்க்கிரகபெருள வாதா (க)

மனநெகுக்கனைமீதில்வைத்தையாகிருபைசெய்ய
மயிலேறிவாரு முத்தையா

இ, ஆனந்தபைரவி ஏகதாளம

பல்லவி

சரவண பவனே கிருபை செய்
சரணஞ்சண்முகனே

அநுபல்லவி

வரமருளுஞ்செந் தாமரைப்பாதனே
வள்ளிதெய்வானை மனோகரநாதனே
கார்த்திகையம்பதி வாழுமவிநோதனே
கடைக்கண்திரும்பிப் பாருநீதனே

சரணங்கள்

ஆதிபராசிவசமரகுமசிவிணையில் வந்தனைசெய்து
அன்புடன்பாடித்துதிக்குமடியார்க்கருட்செல்வமுந்தந்தனே
நீதியுள்ளவரிடத்திற்சேர்ந்தின்பதிட்டையருள் கந்தனே
நித்தமுமுன்றன்சரணத்தைநம்பினேனிரட்சியுமானந்தனே

சுத்தவகண்டபரிபூரணானந்தசுவாமிமலைக் கிறைவா-உன்றன்
சுந்தரமான சுகந்தமலர்ப்பதந்தோன்றவே வருவாய்
சித்ரகலாபமயூரவாகனசிவசுந்தரி புதல்வா
சித்தம்வைத்தென்றனை முற்றிலுங் காத்தருள்சேனாதிபனே முத
சரவணப (ல்வா

அருளுருவாகியவானந்த வேலா-நல்
அற்புதமாகியதற்பரனே சீலா
மருவளர்நீபமலர்மாலையணிந் தோளே
மனதினினைந்தினமும்பணிந் தேனே (௨)
சரவண பவனே கிருபைசெய்
சரணஞ்சண்முகனே

இராகம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்-தள்ளல்.

பல்லவி

சித்தமனமகிழ்ந்தவரவேணுமையா நின்
சித்தமிரங்கியருடரவேணுமெய்யா

அநுபல்லவி

கர்த்தன்மருவிய உத்தமிபுதல்வனே
காங்கேயம்பதிதனி லமர்ந்தமுருகையனே
முத்தமிழடைவினைப் பத்தருக்கருளிய
முத்தையனேயுனதுசித்தம் வைத்தென்முன் நீத்

சரணங்கள்

அங்கங்குணர்வாகியறிவாகிப்பொருளான
ஆறுமாமுகனேயன்றிவேறுதெய்வங்க ளுண்டோ
எங்கெங்குநிறைகின்றஇறைவாநின்சரணத்தை
எப்போதும்புகழ்ந்துகொண்டிருப்பதைநீர் கண்டோ
எங்கள்மேற்கிருபையாகிய வேலா
ஏழையடியவர்க்கருளனு கூலா
சங்காரருளியசரவண பாலா
சர்வபரிபூரணசாயுஜ்ய சீலா-நித்த
சுத்தபரிபூரணசுகசுகிர்தமான
சுவாமிநாதனேகந்தாபூமிப்பொருளாய் வந்தாய்
சித்துருவாகிய முத்துக்குமாரவுன்றன்
திகழுமருள்கிருபைபுகழவேநீ தந்தாய்
சித்தர்முனிவர்களுநித்தமகிழ்ந்து போற்ற
சிறந்தபதந்தனிலேநிறைந்துமலர்கள் சாற்ற

எத்திசையிலுமுள்ளபத்தர்களையுங் காத்த
இலங்குமயிலேறி அலங்கிருதமாகத் தோற்ற-மித்த
சிங்காரமாகியதெய்வானையைமருவும்
தேவர்சேனாபதிசெல்வக்காரு மெந்நாளும்
மங்களமிகுங்குறவள்ளியைப்புணர்ந்து
மாதவனுமயேபோதமனைஞ்செய் தானும்
பங்கயப்பதத்தின்திருவருள் கூட
பலகலைகளுங்கற்றுணர்ந்துமே பாட
மங்கலமிகுசோபனங்கள்கொண் டாட
மல்லிகைமுல்லைபலமலர்ப்பதஞ் சூட(சு)

நித்தமனமகிழ்ந்துவரவேணுமையா நின்
சித்தமிரங்கிபெரு-ரவேணுமெப்பா

இராகம்-மோகனம்-கலியாணி-சம்பைதாளம்,

பல்லவி

கார்த்தையம்பதிக்கந்தனே வந்து
காத்துரட்சிபுமெந்தனே

அநுபல்லவி

திருந்தும்பன்னிருதோளனேவள்ளி
தெய்வானை மணாளனே கார்த்தை

சரணங்கள்

குமரகுருபர நாதனே-யின்பம்
கொடுக்குமயிலேறும் பாதனே
அமரர்முனிவருந்தினந்தினந்தொ ழு
மாதியேபரஞ்சோதியே கா

கார்த்திகேயனேகாங் கேயா-வுன்றன்
கருணைதரவிதுபாங் கையா
நாற்றிசைகளுமேற்றிப்பணிந்திடு
நாதனுக்கனுகூலபாலனே கா

அறுமுகனெனும் வேலனே-நல்ல
ஆதிமாமறை சீலனே
குறுமுனிக்குபதேச நேசனே
குன்றுதோறுஞ்சயம் பிரகாசனே கா

தேவர்சேனாபதி முருகனே-திரு
மாலுக்கினிதான மருகனே
சேவற்கொடிபிடித்தோங்கிவளர்ந்திடுஞ்
சேயனேயருணேயனே ௪௨

சடாட்சரப்பொருள் ரூபனே-நறுஞ்
சாதிகடம்பணி மார்பனே
கடாட்சம்வைத்தெனைக்காரு ணையனே
காசினியிற்கொண்டாடு மெய்யனே (௪)

கரந்தையம்பதிக்கந்தனே ர்வது
சாத்துரட்சியுமெந்தனே

இராகம்-சங்கராபாணம்-சின்ன ஆதிதாளம்

பல்லவி

சிவசுப்ரமண்யா வடிவேலா-உன்றன்
சித்தம்வைத்தெனரட்சி யுமைபாலா

அனுபல்லவி

புவனம்படைத்தவயன் புரந்தரனுந்தேவரும்
போற்றிகுமாரகுருமூர்த்தியென் றேருகவரும்-சிவ

சரணங்கள்

ஆதிபரிபூரணசோதிரூபமே யிந்த
அகிலமெல்லாநிறைந்தாறுமுகமாய் வந்த
நீதியேநின்னிருசரணநினைவிற் றந்த
நேசத்தையென்சொல்வன்தேசம்புகழு ம் கந்த-சிவ

வள்ளிதெய்வானைமகிழும் லீலாவி னோதா
வாலதண்டாயுதபாணிகிருபை நீதா
தெள்ளுதமிழ்பான்சொல்லச்செல்வந்தரும் நாதா
தேவர்சேனாபதியேதிவ்வியகமல பாதா-சிவ

சரவணபவசண்முகனேகுகனே யென்று
சந்ததமுந்துதிக்குமுன்றனடிமைக் கின்று
வரந்தரவேணுமென்றுபழமறையும புகன்று
வளர்கரந்தைப்பதியின்மகிழ்ந்துபணிந்தே னின்று (௫)

சிவசுப்ரமண்யா வடிவேலா-உன்றன
சித்தம்வைத்தெனரட்சியுமைபாலா

இராகம்-பரசு-ஆதிதாளம்.

பல்லவி

வரவேணுமையா மயிலேறிவரவேணுமையா

அநுபல்லவி

வரவேணுமயிலேறிவள்ளிதெய்வானையுடன்
பரமசுந்தரிபெற்றபாலாமனமகிழ்ந்து வர

சரணங்கள்

அன்னைபிதாகுருதெய்வமென் றுனையோது
மன்பர்களிடத்தினி லணுகாமலேயிருந்திட
எங்கோரமும்புகழ்ந் திருக்கதிரிப்போது
ஏழையடியேனை ரட்சிக்கமயின்மீது வர

பாரிசதிகதியுஞ்சாதிமலரணியும்
பரமனருளாளவந்தபரிபூரணவேலா
நீதிநெறிவிளங்குமாதிமறைமுடிவி
ளித்தமுடனமிடுக்கத்தனேமகிழ்ந்திப்போ வர

சிவகுருபரனெனுஞ்சேனாபதியேயுன்
சித்தமிரங்கியேபத்தருக்கருள்செய்யும்
நவமணிசிலம்பணிசற்பதகமலத்தை
நம்பியவடியேனுக்கின்பமுந்தரவிங்கே வர

அருணகிரிநகரிலருணகிரிநாதனுக்
கனுபூதிதந்தருளாண்டவனேயுன து
கருணையாலென்றனைக்காத்துரட்சியுமையா
கந்தனேயுன்றனேசந்ததமுந்துதிக்க வர

தேவர்சிறையைமீட்டதிருவருள்பதந்தனை
தெரிசித்தபேர்களெல்லாம்பரிசுத்தநிலையருள்
ஆமலகஸ்தியருக்குத்தமிழுரைத்தகுகனே
அண்டர்பணிகரந்தைதெண்டாயுதபாணி (சு)

வரவேணுமையா மயிலேறி வரவேணுமையா

இராகம்-ஆகிரி-ஏகதாளம்

பல்லவி

ஐயனேயுன்றன்மனதிரங்கியே வந்து
ஆனந்தவாழ்வருள்வாய்

அனுபல்லவி

மெய்யனேயனந்தகோடிவேதங்கள் துதிக்கப்பெற்று
மேதினியெங்கும்விளங்கஆதிமுதலாய்த்துலங்கும் ஐய

சரணங்கள்

அல்லும்பகலுமென் னறிவிற்குடியிருக்கும்
ஆறுமுகனேயுன்னை யன்றியொருதெய்வத்தை
சொல்லித்துதிக்கரியா திருப்பதைகீர்த்தணுஞ்
சோதிக்கவேண்டாமென் மீதிற்கிருபைசெய்யும் ஐய

ஆதியந்தமுநடுவாகி நிறைந்திருக்கும்
ஆரணனேபரி பூரணானந்தகந்தா
சோதிமுடிதுலங்க சாதிகடம்பணிந்து
சொர்னமயின்மேலேறு மன்னதாதாவேயெங்கள் ஐய

வள்ளிதெய்வானையென்று யுள்ளமகிழ்ந்தருள
வாலாதண்டாயுதரின் கோலமாரறிவார்கள்
எள்ளினுள்ளெண்ணெய்போலே யெங்குநிறைந்திருந்து
மேதுமறியாதுபோ லிருப்பதறியாயமோ யஐ

திருப்பரங்குன்றந்திரு வாவினன்குடிசெந்தூர்
திருவேரகமதனில் வளர்வதல்லாமலும்
விருப்பமாயென்ற னுள்ளததிலும்வளரும்
வேதாந்தப்பொருளான நாதாந்தமுருகாவென் ஐய

சத்திவேளரிபெற்ற நித்தியவடிவேலா
சரணத்தைநம்பினேன் கருணைபுரிவாயென்றும்
பத்தனுறுமுகம் பகருங்கவிக்கிரங்கி
பாக்கியசிலாக்கிய யோக்கியங்களும்தரும் (எ)

ஐயனேயுன்றன்மனதிரங்கியே வந்து
ஆனந்தவாழ்வருள்வாய்

இராகம்-புன்னாகவராளி-ஜம்பைதாளம்

பல்லவி

வடிவேல்முரு கையனே உன்திரு
வடிபைநம்பினேன் மெய்யனே

அநுபல்லவி

அடியார்க்கருள்புரியும் ஆறுமுகவா! தேவா
அகமகிழ்ந்துமேயுன்ற னருடந்திடவருவாய்-வடி

ல்கண்ணரச

சங்காரருள்பாலனே நித்திய சாயுச்சியபதசீலனே
திங்கள்வதனவேலனே நல்ல தேவருக்கனுகூலனே
மங்கைதெய்வானை வள்ளி மகிழவேமயிலேறி
சிங்காரமாகவந்துன் திருவருட்கண்பாரும்-வடி

அண்டர்கள்தொழுபாதனே ஞானிகள் அகலானந்தபோதனே
மண்டலங்கொண்டாடுநீதனே பிரணவமந்திரசொரூபநாதனே
தொண்டர்கள்மனதினின் றுநிம்குருபரனே
கண்டுனைத்தரிசிக்கக் கருணைநல்கும்பரனே-வடி

பரிபூரணானந்தனே அகண்டமான பரம்பிரமமானகந்தனே
அரிமருகனேயுக்கனே தினம்துதித்தடைக்கலமெனவந்தனே
சரவணபவனேயுன் சரணத்திலேபத்தி
தரவேணும்காங்கைவசம் தயாபரனேசத்தி (அ)

வடிவேல்முரு கையனே-உன்திரு
வடியைநம்பினேன்யெய்யனே

இராகம்-காம்போதி-திரிபுடைதாளம்

பல்லவி

கந்தனேயுன்றன்பதத்தை சந்ததம்தொழுதுபோற்ற
வந்தருடன்தெனைக்காருஞ் சிந்தைமகிழ்ந்தே

அநுபல்லவி

சந்திரசூரியமித்திரர் தானவர்வானவர்போற்றி
அந்தணர்வேதமுனிவ ராரணங்களும்வாழ்த்தும் (க)

சரணங்கள்

பங்கயப்பதம்தனிலே தங்கியசிலம்பிலங்க
செங்கையிலேந்தியவேலுஞ் சேவற்கொடிதுலங்க
நங்கைவள்ளிதெய்வானை நாயகியுடன்மகிழ்ந்து
இங்கிதமயில்மேலேறி யென்றனைரட்சிக்கவந்த (க)

அத்திமுகனுக்கிளையகர்த்தனே யேழையிடத்தில்
சித்தமதாவைத்ததவும் நித்தியபரிபூரணனே
எத்திசைமீதிலும்பிர சித்ததெய்வமாய்விளக்கும்
முத்தையாவின்னன்பர்கள் நினைத்ததையருளவரும் (க)

முற்பிறப்பிலேயாறு மெத்தனேதவஞ்செய்தேனோ
அற்புதநின்னுமஞ்சீவ சுப்பிரமணியரென

சொற்பனத்திலுமறவா தெப்பொழுதுமேதுதிக்க
கற்டனைகடந்துநின்ற அப்பனேகிருபைசெய்யும்
கந்தனேயுன்றன்பதத்தை சந்ததந்தொழுதுபோற்ற
வந்தருள்தந்தெனைக்காருஞ் சிந்தைமகிழ்ந்தே (௬)

இராகம்-தோடி-ஏகதாளம்,

பல்லவி

முருகையனேயுன்றன் திருவுளமிரங்கியே
முத்திநெறி தந்தருள்வாய்

அநுபல்லவி

இருகையாலும்மைத்தொழு மன்பர்துயர்நீக்கும்
இன்பசுகவாரியென் னிதயந்தனிலேதேக்கும்-முரு

சரணங்கள்

காராருஞ்சோலைசூழ் கார்த்தையம்பதிவாழும்
காரணனேசரு கூலராருள்மைந்தனே
ஆறிவாருன்றன் ஆனந்தமகிமையே
ஆதிசேடனுங்கூட வோதநாவினந்தேடப்-முரு

வையகம்புகழ்ந்தேத்தும் வடிவேலயுதனேநின்
வாசமலர்ப்பதத்தை நேசமுடன்றுதித்து
துய்யமலர்சாத்தித் தொழுதனுதினமும்போற்றும்
தொண்டர்களானந்தம் கொண்டுமேகிழ்ந்திட-முரு

அண்டபகிரண்டமும் காத்தமரர்க்கு
ஆனந்தமாகவரசு முடியிந்திரற்கு
பண்டுகொந்தருள் சரவணபவனே
பட்சமுடனேயெனை ரட்சியிதுசமயம் (௭)

முருகையனேயுன்றன் திருவுளமிரங்கியே
முத்திநெறிதந் தருள்வாய்

இராகம், நீலாம்புரி, ஆதிதாளம்,

பல்லவி

ஐயாநின்னிருசரணத்தை நம்பினேன்
அருடர வருவாயே

அநுபல்லவி

மையார்விழிவள்ளி கையாற்றழுவிட
மகிழ்ந்தோனேயென்றும் புகழ்ந்தேனே ஐயா

சரணங்கள்

வானாகிப்புவியாகி மதியிரவியாகி
வந்தோனேயிங்ஙன் தந்தோனே (ஐயா)

ஊனாகியுயிராகி உயிருக்குணர்வாகி
யுறைந்தோனேயெங்கு நிறைந்தோனே (ஐயா)

அண்டர்முனிவர்களுங் கண்டனுதினம்போற்றும்
ஆரணனேபரி பூரணானந்தனே (யாஐ)

வண்டிலங்கியமலர்க் கொண்டைதெய்வானைக்கேற்ற
மன்னவனேதினம் என்னகத்தேவளர் (ஐயா)

ஆறுசிரமதனி லாறுமகுடமணி
அயிலோனேபச்சை மயிலோனேயென் (ஐயா)

ஆறுமுகம்புகழ்ந்து கூறுந்தமிழ்க்கிரங்கும்
ஆண்டவனேமாலை பூண்டவனே (யிக)

ஐயாநின்னிருசரணத்தை நம்பினேன்
அருடர வருவாயே

இராகம், புன்னாகவராளி, ஆதிதாளம்

பல்லவி

கந்தவேளேயெங்க வேளையிலுமெனை
கைவிடாமற்காத் தருள்வாய்

அநுபல்லவி

சொந்தபேழையென்று வந்தனுள்முதற்கொண்டு
சிந்தைதான்றியுமே செப்பவேணுமோயின்று (கந்த)

சரணங்கள்

பொதிகைமாமுனிவர்க்குப் போதகிரிலையைக்காட்டி
போதித்துதவந்தனை சாதித்திருக்கனுட்டி
விதியையுண்டாக்குமிரு வினைப்பகுதியையோட்டி
விண்ணவர்க்குமுயர்ந்து விளங்குங்கதியிற்கூட்டும் (கந்த)

சாரமில்லாதசம் சாரததிலேயிருந்து
சாந்தமுமுனைது சரணந்தனைமறந்து
பாரமாகியகோர பாவந்தனிற்பிறந்து
பாதவியாமலெனைப் பார்த்தருளுஞ்சிறந்து (கந்த)

காயமெனும்பெரிய காட்டில்வாழ்காய்சரி
காடிவானாமரி கடும்புலிமதகரி

ஓமாமலனுதினம் பாயாமலருள்புரி
ஒருவனுலாகாரீ யொருவனேபரிகரி (கந்த

சூராதிசூரரெல்லாந் தொலைக்கின்றனைப்பண்டு
சொர்க்கத்திருக்கமூடி சூட்டிமகிழ்ச்சிகொண்டு
பாராதிபண்டமெல்லாம் படைத்தயனையுந்தொண்டு
பண்ணச்செயுமகிமை பார்த்திலனேகமுண்டு (கந்த)

அருணகிரிமுதலாமடியார் நினைக்குமுன்னம்
அஞ்சலெனவுதவியுமருளுப தேசஞ்சொன்ன
கருணைகடாட்சாவென்னை காத்துரட்சிப்பாயென்ன
கருத்தினாற்றுதித்து கழல்பணிந்தனையுன்ன (கந்த)

கந்தவேளேயெந்த வேளையிலுமெனை
கைவிடாமற்காத் தருள்வாய்

இராகம்-அசாவேரி-தாளம்,முகாரி

பல்லவி

அனுதினமுனதிரு சரணமேதுதிசெய்ய
அருளெனக்குத்தாரும்

அநுபல்லவி

கனகமாருதியகரங் தாபுரிவேலா
காசினியோர்புகழுங் கபாலமயில்வேலவா (அனுதின)

சரணங்கள்

புண்ணியவசத்தினாற் புருஷஜென்மமெடுத்து
பூரணானந்தசுகம் பொருந்தாமலேவிடுத்து
மண்ணிற்றுயிர்விளக்கு மாதர்தமையெடுத்து
மயங்கித்திரியாமலுன் மகிமைதனைப்படித்து (அனு)

இந்திரன்முனிவர்க ளிமையோர்துயரங்கேட்டு
இறைவனேசரவணத் தெழுந்துசண்முகங்காட்டுங்
கந்தன்குமாரனென கார்த்திகைபாலூட்டுங்
காங்கேயனேயெனது கருத்திலானந்தங்கூட்டும் (அனு)

சுத்தசுயம்பிரகாச சோதியாகவெழுந்து
சுருதிஞானகுருவாய்க் தோன்றிமனமகிழ்ந்து
பத்தர்க்கிரங்கிநித்திய பரமகைவல்யந்தந்து
பார்மீதில்விளங்கும்நின் பாதந்தனைப்பணிந்து (அனு)

அனுதினமுனதிரு சரணமேதுதிசெய்ய
அருளெனக்குத்தாரும்

இராகம், புன்னாகவராளி, ஆதிதாளம்

பல்லவி

சரணாரவிந்தமெனக் காரணாகுந்திவ்ய
சரணாரவிந்தமெனக்காரணாகும்

அநுபல்லவி

கருணாகடாட்சமெங்கள்
காங்கேயன்றனது — சரணா

சரணங்கள்

ஊரார்பகைத்திட்டாலும்
உறவோர்வகைத்திட்டாலும்
பாராளுமன்னவர்கள்
படைகள்தடைசெய்தாலும் — சரணா

மாயப்பிரபஞ்சவாழ்க்கை
மயக்கத்திலிருந்தாலும்
தாயார்வயிற்றினின்றும்
தரணியிற்பிறந்தாலும் — சரணா

கன்னல்வில்லியும்பல
கணைதனைக்கொண்டெய்தாலும்
மின்னலிடைமங்கையர்
விரும்பிமயல்செய்தாலும் — சரணா

வாரிதியுங்கனலும்
வளர்ந்தாலுந்தளர்ந்தாலும்
மாருதங்கள்வெகுண்டு
மண்ணும்விண்ணெழுந்தாலும் — சரணா

ஞானநிலையில்மனம்
நலிந்தாலுமலிந்தாலும்
ஈனநெறியாரென்னை
யிகழ்ந்தாலும்புகழ்ந்தாலும் — சரணா

ஆறுசமயங்கட்கும்.
ஆறுதலையாய்வந்து
தேறுமறைப்பொருளை
தெரிவித்ததேசிகன்றன் — (௰௪)

சரணாரவிந்தமெனக்காரணாகுந்திவ்ய
சரணாரவிந்தமெனக்காரணாகும்

இராகம், மோகனம், ஆதிதாளம்

பல்லவி

கண்டுமனமகிழ்ந்தேன் முருகனை
கருதித்தினம் புகழ்ந்தேன்

அநுபல்லவி

அண்டர்கள்துயரமகற்றிய வேலனை
ஆதிபரப்பிரம்மமாய்நின்ற சீலனை கண்டு

சரணங்கள்

இன்புறுநாரத ரேழிசைதுதிபாட
வெழில்முரசுமுழங்க வேழுலகமுங்கூட
அன்புறுமயில்மீதி லாறுமுகனின்றாட
அருகில்வல்லிதிம்பனு மடியிணைமலர்சூட கண்டு

சாத்திரவேத மறையோர்புகழ்ந்திட
சங்கரனுமுமைமாலுஞ் சதுர்முகன்மகிழ்ந்திட
தோத்திரஞ்சொல்லியே சுரர்முனிபணிந்திட
தொண்டர்களானந்தங் கொண்டுவணங்கிட கண்டு

சேர்ந்தையம்பதிவாழுங் கருணாகடாட்சனே
கருதித்துதிப்பவர்க் கருளசெய்யுமோட்சனே
வாந்தருகும்வள்ளி தெய்வானைநேசனே
வாலதெண்டாயுத பாணிகுமரேசனே (கரு)

கண்டுமனமகிழ்ந்தேன் முருகனை
கருதித்தினம் புகழ்ந்தேன்

இராகம், பியாகடை, ஆதிதாளம்

பல்லவி

அரகரசிவகுரு நாதனே யெனக்
கானந்தமானவருட் போதனே

அநுபல்லவி

வாந்தருகுமுன்றன்சரண முருகையா
வள்ளிதெய்வானையை மருவும்பன்னிருகையா அரகர

சரணங்கள்

கருணைக்கடலமுதிற் கலந்தகனி ரசமே
கன்னலுடன்பால்தேனு நண்ணுமன்ன மயமே
வருணக்கலாபமயிலேறிவருந் தெய்வமே
வறுமைப்பிறவிநோயைவராமற்காத் தருளுமே அரகர

முத்திக்குவித்தாதி வனாதிமுதல்வனே
முழுவதுங்கப்பினன் பசுபதிபுதல்வனே
சத்திவேலாயுதா நித்தியானந்தனே
சரவணையிற்பிறந்து வந்தசாமிநாதனே அரகர

எண்ணேகண்ணின்மணியே கருத்தேகருத்திலூறும்
கார்த்திகேயனேயுன்னை போற்றபுத்திகள்பூணும்
விண்ணேவிண்ணின்றொளியின் மேவினோரின்பந்தோறும்
விரும்பித்துதிக்குமென்ற னிடம்வந்தருளவேணும் (௧௬)

அரகரசிவகுரு நாதனே யெனக்
கானந்தமானவருட் போதனே

இராகம்-சைந்தவி - ஏகதாளம்

பல்லவி

சரணஞ்சரணம்வடிவேலா

அநுபல்லவி

கருணைவிழியுமைகளிகூரும்பாலா (சரணம்)

சரணங்கள்

சரவணபவானந்த குகனே உன்றன்
சரணத்தைநம்பினேன்சங்கரர் மகனே
தரவேணுங்கருணைசண் முகனே இது
சமையஞ்சமையங்கடைக்கண்டார்முருகோனே (சரண)

வள்ளிதெய்வானை மணாளா நல்ல
வாசக்கடம்பைமகிழ்ந்தணி தோளா
துள்ளுமயிலாஉனக் காளா யின்ப
சுகந்தரவேணுமேபழமயக் காளா (சரண)

உன்பாதம்வணங்கினேன் தன்னை இன்னம்
ஒருவரைப்போய்கெஞ்சப்பண்ணாதே நின்னை
அன்பாகப்புகழ்ந்தேனே யன்னை பிதாவும
அருள்குருதெய்வநீகாத்தரு ளென்னை (சரண)

அண்டர்முனிவர்தொழும் பாதா தமிழ்
ஆறுமுகந்துதிக்குமருள்குரு நாதா
செண்டாயுதபாணி நீதா காக்கத்
திருவுளமிரங்கியேகிருபைசெய் வரதா (௧௭)

சரணஞ்சரணம்வடிவேலா

இராகம், எதுகுலகாம்போதி, ஏகதாளம்

பல்லவி

முருகையாவுன்றன்திருவடியைநம்பினேன்
முற்றிலுங்காத்தருள்வாய்

அநுபல்லவி

அருள்வடிவாகியேஅகிலமெல்லாம் நிறைந்த
ஆண்டவனேயடியார்வேண்டவாளுஞ் சிறந்த (முரு)

சரணங்கள்

என்றுநகயென்னமெல்லா மெண்ணியேழைமனது
யிருந்தநாட்போதாதீரிரங்கியரு ளனது
கண்ணினொளிமணியேசுகந்தருகா வனது
கடைக்கண்ணாற்பார்த்தெனைக் காக்கச்சமையமிது (முரு)

வேலுமயிலுந்தண்டைககாலுமேதுணை யென்று
விரும்புமன்பருளத்தின்மேவுங்குமரா யின்று
சேலாரும்விழிவள்ளிதெய்வானையுட னின்று
சீர்தரவேவிளங்குஞ்செவ்வேளெனைப் புரன்று (முரு)

சங்கப்புலவன்சொன்ன தமிழ்க்கிரங்கியே வந்த
சர்வபரிபூரண சாமிநாதனே சொந்த
உங்களடிமையெனை யுகந்துரட்சியு மிந்த
உலகம்புகழ்கரந்தை யூரில்மன மகிழ்ந்த (கஅ)

முருகையாவுன்றன்றிருவடியைநம்பினேன்
முற்றிலுங்காத்தருள்வாய்

இராகம், காம்போதி, சின்ன, ஆதிதாளம்

பல்லவி

சித்தமிரங்கியென்னைரட்சித்தவடி வேலா
செல்வந்தந்தருள் பாலா

அநுபல்லவி

பக்தியுடன்பணிந்துபாமாலைதினஞ் சாற்ற
பணிகொடுத்தருளுமுன்பாதபங்கயம போற்ற (சித்த)

சரணங்கள்

ஆதியந்தமுமில்லாமருவுருவா யெழுந்து
அகிலாண்டகோடிகளனைத்துமாகி நிறைந்து

நீதியாய்நின்றநின்னுமத்தனைப் புகழ்ந்து
நிற்கவேமைகொண்டாய் நேசமுடனே மகிழ்ந்து சித்த

எத்தனையன்னையர்களிடத்திற்பிறந்திந் நாளா
ஏழைமாதர்மையோகத்திசைந்திருவினைக் காளா
நித்தநற்றவஞ்செய்யாநின்றேன்பன்னிரு தோளா
நீதவந்தந்தாயின்றுநீலவள்ளி மணாளா சித்த

சித்திரமயின்மேல்வந்துதெரிசனஞ்செயக் காட்டி
சிந்தையிற்சடாட்சரத்தியானம்விளங்க நாட்டி
பத்தனாகவுனதுபாதுகைமுடி சூட்டி
பரமானந்தசுகத்தைபரிபூரணமாய்க் கூட்டி (கசு)

சித்தமிரங்கியென்னைரட்சித்தவடி வேலா
செல்வந்தந்தருள் பாலா

இராகம்-மோகனகல்யாணி-ஜம்பைதாளம

பல்லவி

கந்தாகுகாகார்த்திகேயனே உன்றன்
கருணைதந்தருள்சேயனே

அநுபல்லவி

வந்தார்க்குயர்ஞானவாழ்வுதரு கின்ற
வடிவேல்முருகாவுப்படிதனிலே நின்ற-கந்தாகுகா

சரணங்கள்

பரமகுருவருள் போதனே-வுன்ன
பச்சைமயிலேறு நாதனே
அருணசத்தளகமல பாதமென்
அறிவிலனுதினமும்துதி தந்தருள்-கந்தாகுகா

சுத்தசுப்பிர காசனேஉயர்
சுருதிமுடிவினில் வாசனே
பத்தர்சித்தர்கள்பரம ஞானிகள்
பரவியநுதினமிரவியுந் தொழும்-கந்தாகுகா

ஐயனேபன்னிரு கையனே-வள்ளி
அகமகிழ்ந்திடுந் துய்யனே
வையகத்திலென்றன்மெய்யறிவி னின்று
மதுரகவிமழைபொழிய வரமருள்-கந்தாகுகா

நான்மகிழ்ந்தருள் பாலனேதினம்
ஆறுமுகம்புகழ் வேலனே
வாயிருக்கவுஞ்சரணமே செப்பு
வந்துகிருபைக்கண்தந்து ரட்சியும (௨௰)

கங்காகுமாரகார்த்திகேயனே உன்றன்
கருணைதந்தருள்சேயனே

இராகம், கலியாணி; ஜம்பைதாளம்

பல்லவி

இனிமேலாகிலுமுன்றன்மனதிரங்கியே வந்து
இரட்சிக்கவேணுமையா

அநுபல்லவி

மூவர்புகழுந்தஞ்சை மாநகரில்வாழும்
முருகையனேயென்பாற் றிருவுளங்களிகூர்ந்து இனி

சரணங்கள்

எத்தனையோஜென்ம மெடுத்துழன்றுமடியேன்
இரவும்பகலாயுன்னை பாடவகையறியேன்
சுத்தநிர்க்குணமான பரப்பிர்ம்மமேயுன்றிரு
சுகந்தமலர்ப்பதத்தை யகந்தனிலேதுதிக்க இனி

மாயாப்பிறவி மயக்கந்தனையொழித்து
மாமுனியகஸ்தியர்க் கிந்தபதமளித்து
தயார்வயிற்றிலின்னம் வந்துநான்பிறவாமல்
சண்முகனேகண்பாரு மென்னைமறவாமல் இனி

என்னுளுநின்னடி யாருடன்சேரவும்
இகத்திற்குறையில்லை யெனக்களிகூரவும்
உன்னுமனென்னுவில் நன்றாய்ப்புகழவும்
ஒப்பிலாவுனைக்கண்டு மிப்போதேமகிழவும் (௨௧)

இனிமேலாகிலுமுன்றன் மனதிரங்கியே வந்து
இரட்சிக்கவேணுமையா

இராகம், அசாவேரி, ஆதிதாளம், தள்ளல்

பல்லவி

வாலகுமாரகுரு சுவாமிமனமகிழ்ந்து
வருவாய்கிருபைதருவாய்

அநுபல்லவி

ஞாலம்புகழுமிகுகோலமயின்மே      லேறும்
காதா      ஞானபோதா
பொற்பாதா      வருள்நீதா      வா

சரணங்கள்

வாசக்கமழுமுருகேசா      வின்திருவடி
வணங்கித்துதிக்கநற்குணமெனக்      கருள்செய்யும்
வாகா      சிவமோகா
தவயோகா      வள்ளிமோகாநித்யவா
பத்தர்சித்தநற்சென்று      முத்திகொடுத்தருளும்
பரமசிவமகிழ்சரவணை      யிற்றமூம்
பாலா      வடிவேலா
அநுகூலா      இனிமேலாகிலும்      வா
தாரணிக்குவிளக்குமாப்ப      னைகுகனே
சரணென்றடியேனைத்      தருணமிதுவேகாக்க
தஞ்சமென்றேன்      அஞ்சலெனு
செஞ்சரணக்      கஞ்சமருள்
ஆறுமுகந்துதிக்கு      மாதிமுதலேயுன்றன்
அருட்கண்ணாற்பார்த்துநீ      யாற்றுங்கலிவினையை
ஐயா      ஈசாறுமையா
இதுமெய்யாமொழி      வையாபுரி      உஉ)

வாலகுமாரகுருசாமிமனமகிழ்ந்து
வருவாய்கிருபைதருவாய்

இராகம், பைரவி, ஆதிதாளம்

பல்லவி

சிவசங்கரனருள்பாலா உன்றன்
திருவருடந்தருள்வேலா

அநுபல்லவி

தவமுனிபணியுஞ்சரவண      பவனே
சந்ததமுன்றனைநம்பினன்      யானே      சிவ

சரணங்கள்

ஆதிபரப்பிரமசொ      ரூபா தினம்
அமரர்பணிந்திடும்      பூபா

நீதியுடையபிர தாபசாந்த
நீபத்தொடையுடைய மார்பா
சோதிமயின்மேற் றுலங்கிடபொருளே
ஓதிவணங்குமென் னுணர்வினின்றருளே சிவ

வேதம்விளம்புகின்ற கதியே-எங்கும்
வெளியொளிபாய்நிறைந்த மதியே
பூதலத்தோர்விரும்பு நிதியே உன்னை
புகழ்ந்துதினமுஞ்செய்வன் றுதியே
சீதக்கமலஞ்சிறந்த பொற்பாதா
போதப்பொருளைப் புகன்றிடுநாதா சிவ

சிர்மிகவிளங்கவே வாரும்-ஞானம்
சிறக்கக்கடைக்கணுற் பாரும்
பார்வதிகுமாராநீ காரும்இன்ப
பாக்கியவாழ்வையென்றும் தாரும்
வாரணிகொங்கை வள்ளிமணாளா
ஆறுமுகப்புகழ் ஆறிருதோளா சிவ

இராகம்-காப்பி-அடதாளம்

பல்லவி

அருள்வடிவேலா அன்பர்க்கனுகூலா

அநுபல்லவி

கருணைமிகுவே அரு
சண்முகசீலா

சரணங்கள்

பராபரவெளியிற் பரவியவொளியில்
நிராமயமாய்நிறைந்த நிற்குணப்பொருளே
அருவுருவில்லா அருளெனக்குள்ளாய்
விரும்பிநான்காண்பதற்கு விபரம்நீசொல்லி அரு

முப்பொருளொன்றே மூர்த்தியாய்நின்றே
ஒப்பினின்றுடுகின்ற உருவமேதோன்ற அரு

சத்துச்சித்தானந்த தனிமுதலுகந்த
முத்திவடிவாய்வந்த முருகாவின்சரணம் அரு

சிவகுருநாதா சிறந்தபொற்பாதா
அவனியிலாறுமுகமே அன்புறுந்தாதா (உச)

அவருள்வடிவேலா அன்பர்க்கனுகூலா

## இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்

### பல்லவி

தினம்தரிசனம்தரவரவேணும் உந்தன்
திருக்கண்ணாற்பார்த்தருடரவேணும்

### அநுபல்லவி

வனமேவியவள்ளி தனமேவிற்குகா
வாசமலரெடுத்துப் பூசைசெய்யமுருகா-தின

### சரணங்கள்

உலகத்தில்மெய்யான தெய்வமேயுன்பாதம்
உறுதியாகநம்பி யுணருவதேபோதம்
கலைகற்றுங்கருத்தறி யாமலேரவேர்காதம்
கந்தனேயுன்னுடைய கருணைமுகவிநோதம்-தின

பாரதியண்டப் பரப்பனைத்துநிறைந்த
பரப்பிரமசொரூபமே பக்தர்களும்பொருந்த
சீராகவருளுந் திவ்யகுணஞ்சிறந்த
தேவதேவோத்தமாநின் திருநாமமேயருந்த-தின

மனதினினைத்தவரம் தந்திடவேணும்
மயில்வாகனுவுன்னை வாழ்த்தமகிழ்ச்சிதோணும்
உனதுமகிமையை யுரைக்கறியேனும்
உம்பர்கடம்பிரா னெம்பிரானீதானும்-தின

ஏழைக்கிரங்கிக் கிருபைசெய்வேலனே
எப்போதுமென்துதிக் கிரங்கனுகூலனே
வேழமுகற்கிளைய வேதாந்தசீலனே
விளங்கும்தஞ்சைநகரில் விளையாடுங்கோலனே(உரு)

தினம்தரிசனம்தரவரவேணும் உன்றன்
திருக்கண்ணாற்பார்த்தருடரவேணும்

## இராகம்-காம்போதி-சின்னஆதிதாளம்

### பல்லவி

அரிமருகாவுனைநம்பினேன்
அருடரவாகாகுகா

### அநுபல்லவி

திருவேரகத்தில்வாழுஞ்சுவாமிநாதனே உன்றன்
சிந்தைகளிகூர்ந்துவந்தெனைரட்சியும் (அரி

சரணங்கள்

வேதாந்த வேதனே விமலர்க்குப தேசனே
வேலாயுதமணிந்து விளங்குங்கும ரேசனே
நாதாந்தப்பேரொளியில் நண்ணுங்குரு பரனே
நானுன்னைக்கேட்டவரநல்குங்கிர்பா கரனே (அரி)

கல்லாரிடங்களிற்செல்லாமலே யென்றும்
கற்றவரிடஞ்சேர்த்துகருத்தில் விளங்கி நின்றும்
எல்லாமறிந்தவென்னாண்டவனே நீ தானும்
ஏழைமுகம்பார்த்து இரங்கிக்காக்கவே வேணும் (அரி)

தொல்லைப்பிறவி நோய்தொடராமலே யுன்றன்
தொண்டர்களுடன்கூட்டி துதிக்கச்செய்தரு ளென்றன்
அல்லலகற்றியே ஆனந்தம் தந்தருள்
அறுமுகனேயாறுமுகம்புகழுகந் தருள் (உகு)

அரிமருகாவுனைநம்பினேன்
அருட்சரவணகுகா

இராகம்-கண்டா-ஏகதாளம்

பல்லவி

சண்முகனேயென்முகநோக்கியேஇப்போ
தயவுசெய்யுங்குகனே

அநுபல்லவி

கண்மணியாய்நின்றுகலந்தெங்குமேவிளங்கும்
கர்த்தாவேயுன்றன்பொற்றாளைமறவேன் சண்

சரணங்கள்

எரியாறுதன்னிலேயிருக்குமயிர்பாலத்தில்
யேறவேயமமூலத்தேணியெனக்குத்தந்து
பெரிதாகியதச்சிமுடியில்விளங்கும்ரத்னப்
பேரின்பச்சோதியைப்பாரென்றெனக்கருளும் சண்

பஞ்சபூதஞ்சேரும்பதினெட்டுக்கலையிற்
பரஞ்சுடர்வெளியொளிபரவுஞ்சுழிமுனையின்
நெஞ்சமகிழ்ந்ததிலேநிற்கவேயருட்கந்த
நீலமயில்வாகனஞாலந்தனிற்றுதிக்க சண்

இரவுபகலில்லாதகவோசுந்தசிவயோகம்
எப்போதுமுப்பாழிலிருந்து சரணவபவம்

தாலேஞானர்தந்தயாபரனேயனேகம்
சரணஞ்செய்துபுகழ்சந்ததமென்றுகம் (உஎ)

சண்முகனேயென்முகநோக்கியேயிப்போ
தயவுசெய்யுங்குகனே

இராகம்-பைரவி-ஆதிதாளம்

பல்லவி

சரணம்பினேன்குகனேசந்ததமுன்திரு
சரணம்பினேன்குகனே

அநுபல்லவி

மருமலர்சோலைகள் சூழும்
திருவளர்கார்த்தை வாழும்
மங்களகல்யாணகுண மயில்வாகனனேயுன்திருச் (சரணப்)

சரணங்கள்

பக்தர்கள்தினமுங் கூட
பதஞ்சலிவியாக்கிரமர் பாட
மத்தளதாளங்கள் போட
வானவரம்பையு மாட
சித்தர்கண்டுமிகுந்த துதிசெய்ய
சித்திரமயிலேறி நித்தம்வருந்துய்ய (சரண)

சரவணப்பொய்கையின் மூந்த
சண்முகமெனவே வந்த
பராபரப்பொருளே யிந்த
பாரெல்லாம்புகழு கந்த
ராங்கருமுருகாவின் பலரடிவணங்கியே
ஆகராகுருபரா அடியாரோடிணங்கியே (சரண)

எப்போதும்வெட்ட வெளி
இரவுபகலற்ற வொளி
தப்பாதேகுரு மொழி
சார்ந்தவருக்கேநல் வழி
செப்பமுடனேயென்று மொப்பியேதருமென்றன்
அப்பனேஆறுமுகஞ் செப்பியேதுதியுன்றன் (உஅ)

சரணம்பினேன்குகவே-சந்ததமுன்திரு
சரணம்பினேன்குகனே

இராகம்-பரசு-ஆதிதாளம்,

பல்லவி

சண்முகனைகண்பார்க்க வேணுநீ
சண்முகனைகண்பார்க்க வேணுநீ

அநுபல்லவி

உண்மைஞானவான்களுணரும்படி நிறைந்த
உத்தமனேயெங்கள்சித்தமதிலேகாண (சண்மு)

சரணங்கள்

ஆணிலைப்பெண்ணிலை அலியுருவமில்லை
அருள்நிலைதனில்மனம அசையாமலேநிற்க (சண்மு)

உச்சியின்கீழே உயர்பரமபொருளை
உச்சிதமாகப்பார்த்து உளமகிழ்ந்திடவருள் (சண்மு)

கண்ணுக்கருத்துங் கலக்காமலேசிறுத்தி
கமலெழுப்பிபேருலக் கனலைவெளியிற்சேர்க்க (சண்மு)

காணுமிடங்கனிற் காணவுன்னுருவை
கருணைதரவேணும் வருணமயில்வாகன (சண்மு)

நிலையுளமலர்தனில் நின்றநுங்கண்டதும்
நேசமாயொன்றாக நிற்குமிடத்திலே (சண்மு

சுழிவழிதன்னிலே சோதிவடிவுங்கண்டு
சுகம்பெறவேயுனது துணைத்தாளைநம்பினேன் (உகூ)

சண்முகனைகண்பார்க்க வேணுநீ
சண்முகனைகண்பார்க்க வேணுநீ

இராகம்-ஆரபி,ஜம்பைதாளம்

பல்லவி

காணக்கண்ணாயிரம்வேணுமே கஞ்சை
கந்தையில்வாழுமுருகேசனை

அநுபல்லவி

சேனுளதேவருந் திசைமுகன்புரந்தரன்
தினமவர்துவணங்கியதிருத்தோளுச்சேர்வவையைக்-காணக்

சரணங்கள்

சூர்வேர்கிரிதுளைத்த சுந்தரவடிவேலும்
துலக்கியமுகமாறு மிலக்குஞ்சந்திரன்போலும்

சீர்பெறுநாகந்தனிற்சிறக்குமெப்புரி நாளும்
நிறைகுணசொரூபமுஞ் சிலம்பணிதண்டை-க்காலுங் காணக்

வள்ளிதெய்வானைமணாளனைத் தேடி.
மறையோர்முதலாயபலர்குவர்ணத்தவருங் கூடி.
துள்ளிமயிலேறுஞ்சுவாமிபுகழைப் பாடி.
சுகம்பெறவுமினைந்தே முத்துமிகக்கொண் டாடி-காணக்

தேவர்சிறைதனைமீட்டசெலத்தையனைப் போற்றி
திருவடிதன்னின்மேலதிவ்வியமலர்கள் சாத்தி
மூவுலகுந்திக்குமுதல்வன் ஆனந்த மூர்த்தி
மொழிபயன்றநல்லவசிமா முருகுந்தன்மருகன்கீர்த்தி (உ௮)

காணக்கண்ணுபிரம்மவேண்டுமே தஞ்சை
மாநகரில்வாழுமுருகேசனே

இராகம், நீலாம்புரி, ஆதிதாளம்

பல்லவி

இன்னம்பிறவாமற்கிருபைக்கண்பாரும் உந்தன்
இணைபடிகாணத் திருவருள்தாரும்

அநுபல்லவி

மன்னர்புகழுந்தஞ்சை காங்கரபுரியில்வாழு
மயில்வாகனனேமன மௌனநிலைகாட்டி-இன்ன

சரணங்கள்

சுருதிமுடிவுக்கெட்டாதுரியாதீதத்தைச் சென்று
சூட்சமற்குநசொன்னமோட்சத்திலே நின்று
கருதுமன்பருக்கின்பங்காட்டுகாரந்தையா நின்னை
கனவிலுமறவாமனின்னைவிரும்புமூழ மென்னை இன்னம்

எண்பத்துநான்குலட்சஜனனமெடுக்க வரும்
இருவினைப்பகுதியிலேற்றிடாவருள் தரும்
விண்பரவெளிதனில்விளக்குங்குரு பரனே
விண்ணப்பமதைக்கண்டுவிடைகொடும்வேற்கரனே இன்னம்

பிரணவப்பொருளுண்மையிரியமா யீசாமுன்
பேசுமலர்வாயனேபேரின்பவடி யார்க்குன்
சரணங்கோன்றவருஞ்சாமிநாதனே யோதும்
தாணிதனிலேயானுஞ் சடலமெடுத்ததுபோதும் (உ௯)

இன்னம்பிறவாமற்கிருபைக்கண்பாரும்- உந்தன்
இணைபடிகாணத் திருவருள்தாரும்

இராகம்-ஆகிரி, ஏகதாளம்

பல்லவி

வடிவேலா வுன்றன் சரணத்தைத் துதிசெய்ய
வரந்தாருஞ்செயசீலா

அநுபல்லவி

படிமீதினிலன்பர் பிறவிப்பிணியைத்தீர்க்கும்
பரமசஞ்சீவியாய்பரங்கிரிதனில்வளர் வடிவேலா

சரணங்கள்

விண்ணாகிமண்ணாகிவெளியிலொளியு மாகி
வேதக்கனல்புனல்காலிருப்புக்கதியு மாகி
கண்ணாகிசெவியாய்மெய்வலக்கபொருளு மாகி
கருத்தினின்றுறுமிளங்கியிருக்குஞ்செயலு மான-வடிவேலா

பரமற்குப்பிரணவப்பொருளின்விபரந் தன்னை
பரிந்துசெவியிலோதும்பரிபூரணனே நின்னை
காக்குவித்தனுதினக்கருதிப்புகழு மென்னை
காத்தருளவேண்டுமுன்றன்கருணைசன்னதிமுன்னே-வடிவேலா

அருந்தவமுனிவருமமரர்கின்னரர் சித்தர்
ஆயிரங்கண்ணனருக்கனம்புவி பத்தர்
காக்கைபம்பதிவந்துன்கமலபதமே போற்ற
கடாட்சம்வைத்தருட்ருக்கந்தாமகிமை டெற்ற

வடிவேலா வுன்றன்சரணத்தைத்துதிசெய்ய
வரந்தருஞ்செயசீலா

இராகம், கன்டா, ஏகதாளம்

பல்லவி

சரவணபவனேயுன்சரணமலர் தன்னை
சந்ததமுங்கண்டுதொழவந்தரு ளென்முன்னே

அநுபல்லவி

அரவணைமான்மருகனெனும்ஆறுமுக வேலா
அருவுருவில்மனதுவிக்கஅருடருகுஞ் சீலா-சரவண

சரணங்கள்

நித்தபரிசுத்தமவுனக்கயிர்த மூண்டு
நீநானென்னுமல்நிற்குநிலைமைதனைக் கண்டு
சித்தமகிழ்ச்சேயுனதுதிருவடியிற் றூண்டு
செய்துநிற்கக்கிருபைதந்து சிந்தைகுடிகொண்டு-சரவண

எவ்வுயிர்க்கு'வ்வுயிராயிருந்துவிளை யாடும்
எனையேதாகுமுமாயென்மனது நாடும்
பவவினைதீர்க்குநிறைபரமனையே பாடும்
பலகாலுமானந்தபரத்திலிலே கூடும் ௪௩

விண்ணிடத்தேகன்மனத்தைமேவியதிற் சேர்க்க
விளக்கொளிபோலிலங்குமெய்ப்பொருளைப்பார்க்க
தண்ணருளாகிப்பேரிளங்குஞ்சாமியெனைக் காக்க
தபவுசெய்யுமாறுமுகமைமிழ்நினமு மேற்க

சரவணபவனைசரணமலர் தன்னை
சந்ததமுங்கண்டுகொழுவந்தரு ளென்முன்னே

இராகம், மத்தியமாவதி, சம்பைதாளம்

பல்லவி

கந்தனேகாங்கேயனேயான் மகனே-உன்றன்
கண்ணாலேபார்த்தெனதுகவிதீர்சண்முகனே

அனுபல்லவி

வந்தனஞ்செய்தனையும்புகழ்ந் தேனே-என்றன்
வாக்கிலேயிருந்துமிகவரந்தருகும் தேனே க

சரணங்கள்

நிலைமையில்லாதினியுலகசா சாரம்-இதில்
நின்றுதவஞ்செய்யமனநிற்கும்வெகு தூரம்
மலையெனவேவருகுமகச் சாரம்-அதில்
மயக்காமன்மனதுநிற்கவைப்பதுன் பாரம் க

காண்பதுவுக்கனவதுபோல் மாயம்அதை
கருதாமல்மனவெளிகோட்டுவதே ஞாயம்
பூண்பணிமேற்பொறிகளுக்கு பயம்இல்லாப்
புருவமையத்திருக்குமுன்னைப்போற்றச்செய்சகாயம் க

மலைமுருகாகுமரகுரு பரனே-எனக்கோர்
மனுவுதரவேணுமிப்பமனமகிழ்சேவற்கரனே
குலமுழுதுமடிமைகொள்ள குகனே-வந்து
கொடுத்தருளுமானந்தக்குஞ்சரிநா யகனே க

உன்னையனுதினமு மறவாமல்புகழ்ந்து
தொருவரைப்போய்பைப்பேய்புகழ்ந்து மிரவாமம்

அன்னைவயிற்றினாற் பிறவாமல்-இந்த
அகிலமதிலுனைத்துதியாவசடனார் சாராமல் க

நம்புமடியார்க்கருளும் வேலாபச்சை
நடனமயில்மீததிநடனமிடுங் கோலா
அம்பிகைசௌரிபெற்ற பாலா-திவ்ய
ஆறுமுகந்தமிழ்க்கிரங்கியருளுமனு கூலா

சந்ததங்காங்கேயனேபரன் மகனேயுன்றன்
கண்ணாலேபார்த்தென்கலிதீர்சண் முகனே

கண்ணி-இராகம்-காம்போதி-மட்டைதாளம்,

முத்திக்குவித்தாய்முளைத்தபரஞ்சோதி முருகா என்றன்
சித்தத்திலானந்தசித்தமுந்தந்தருள் முருகா க

சற்பரமாகியசாயுச்யபத முருகா-தினம்
விற்புருவநுதிமேவிநான்காணச்செய் முருகா உ

ஆதியுமந்தமுங்கண்டமுமேகமா முருகா-நின்ற
போதநாங்கண்டுபுகழவேநீயருள் முருகா ௩

சித்திபகிரஞ்சனசிட்களானந்தனே முருகா-உன்றன்
சித்துருவானசெயலறியச்செய்யு முருகா ௪

மாலயனுருத்திரன்மயேசன்சதாசிவ முருகாசத்தி
கோலமுமாறுமுகமாய்நின்றுபருள் முருகா ரு

சிங்கையினுள்ளேசிவலிங்கமாகிய முருகாவுன்னை
வந்தனைசெய்யவரமெனக்குத்தாரு முருகா ௬

அன்பேயறிவேபரசேயமிர்தமே முருகா வளர்
இன்பம்வந்தென்றுமிருக்கக்கிருபைசெய் முருகா ௭

நிக்கமுமனமிரண்டுநேசமாய்ச்செய்தி– முருகாபொல்லாச்
சத்துருவாலொருகாழ்ப்பில்லாமலருள் முருகா ௮

அன்னையேயப்பனேயனேதெய்வமே முருகா-யான்
உன்னையல்லாலினியுரைப்பதாரோடேசொல் முருகா ௯

உன்பாதமன்றிநானொன்றையுநம்பலே முருகா-நீயும்
அன்பாகவேயெனக்காதரவுசெய் முருகா ௰

எத்தனைகுற்றங்களைநான்செய்யினு முருகா-அதை
சித்தங்களிகூர்ந்துமுற்றும்பொறுத்தருள் முருகா ௧௧

இராகம்,நாதநாமக்கிரியை,சம்பைதாளம்

பல்லவி

வடிவேல்முருகையாசரணம் உன்றன்

ஞ

அநுபல்லவி

அடியாரைரட்சிக்கவிதுநல்லதருணம் வடி

சரணங்கள்

சங்கரசிவகுரு நாதா நித்ய
சாலோகமேமுதற்சாயுச்சிய பாதா
தங்கதிருப்புகழ்கொண்ட காதா-அன்பர்
துணையாயிருந்தென்றுசுகமதை நீதா வடி

திருஞானசம்பந்த மூர்த்தியாகி
தென்கூடல்பாண்டியன்வினையையுந் தீர்த்தி
அருள்ஞானவுபதேச கீர்த்திபொதிகை
அகஸ்தியமுனிக்குரைத்தஆனந்த பூர்த்தி வடி

குமரகுருபர தேவேவனக்
குறத்தியைக்கூடிமணஞ்செய்யும் பூவே
அமரர்தொழுதேற்றுங் கோவேதினம்
ஆறுமுகம்புகழ்க்கருள்செய்கர்த் தாவே வடி

வடிவேல்முருகையாசரணம் உன்றன்

இராகம், புன்னாகவராளி, ஆதிதாளம்

பல்லவி

முருகாகிருபைதருவாய் சகரட்சக
முருகாகிருபைதருவாய்

அநுபல்லவி

திருவேரகந்தனிலே குருவாயெழுந்தருளி
அருமாமறையீசர்க்கு திருவாய்மலர்ந்தருளும் முரு

சரணங்கள்

மாலயனுமறியா மூலகாரணமான
கோலபரமனருள் பாலனெனவேவந்த முரு

எண்ணில்லாதசன்ம கண்ணிடாமலுன்றன்
கண்ணினாலேபார்த்து புண்ணியமேதரும் முரு

பூமிபுகழனந்த நாமமகிழுங்கந்த
சாமிபதமருளுஞ் சாமிமலையினின்று முரு

வேதமந்திரம்புகழ் நாதபிரமமேமயங்கும்
போதமயமாய்நின்ற பாதமெனக்கருளும் முரு

அலையுமனதைக்காம வலையிற்படாமல்ஞான
நிலையிலிருக்கச்செய்யு மலையைத்துளைத்தவேலின்

முருகாகிருபைதருவாய் சுகராட்சக
முருகாகிருபைதருவாய்

இராகம், ஆனந்தபைரவி, திரிபுடைதாளம்

பல்லவி

உன்றன்பாதம்பினேனையா சுவாமிநாதா
உனக்கெனைக்காத்தருள்செய்யுமெய்யா

அநுபல்லவி

மன்றல்கமழ்மலர்ச்சோலைசூழ்ந்திடும் கார்காபுரியில்
மகிழ்ந்துதினமுமயின்மேல் வாழ்ந்திடும் உன்

சரணங்கள்

பிறவிக்கடலிற்றிடங்க நாயேனை கருணைகூர்ந்து
பேரின்பக்கடற்சேர்த்த நேயனே
அறிவுக்கறிவாய்நின்ற தூயனே அடியவர்தம்
அகத்திலானந்தங்கொடுக்குஞ்சேயனே உன்

முன்னையனந்தமசுரரை வென்று அன்பர்முன்வந்து
முழுதுங்காத்துரட்சிக்காய் நின்று
என்னையுங்கடைக்கண்ணாற்பார்த்தின்று மனமிரங்கியே
யேழைதனையும்ரட்சிப்பீ ரென்று உன்

பொய்புலைபொறாமையும் கூடுமநெஞ்சருமுனை
புகழ்ந்துபோற்றவவர்வினைகளுமோடும்
மெய்யன்புடனேவிரும்பிய பாடும் ஆறுமுகவன்
வேண்டுமேவரம்தரும்வேலாமலர் சூடும்

உன்றன்பாதம்பினேனையா சுவாமிநாதா
உனக்கெனைக்காத்தருள்செய்யுமெய்யா

இராகம், தன்யாசி, ஆதிதாளம்

பல்லவி

சனகமயூரமுருகையன் தரிசனம்
கண்டால்சுகிதிங்க

அநுபல்லவி

பனகசயனன்றிசைமுக னமரரும்
பாமன்மகிழவேறைலை வலம்வரும் சனை

மங்கைவள்ளிமோகா எங்குநிறையோகா
சங்கம்புகழ்தமிழ்நாவிற் றங்கவருளோகா கந்

சத்தருசங்காரா நித்தியசிங்காரா
பத்தியாய்ப்பணியன்பர்க்கு முத்திதருஞானகுமாரா கந்

வஞ்சனைபொய்லோப மிஞ்சிவருங்கோர
நெஞ்சினர்பாலணுகாத செஞ்சரணந்தாருள்

கந்தாமுருகையா காத்தருளுமெய்யா

இராகம், மத்தியமாவதி, ஏகதாளம்

பல்லவி

கந்தனேகுமரா எனைமுற்றும் காக்குங்குருபரா

அநுபல்லவி

வந்தனைசெய்திக்குநாளரிக்கத்தினமே
சந்ததமுன்றிருசரணத்தைநாடினேன்

சரணங்கள்

காமவெகுளிமயக்கமெசூழ்ந்தின்
சேமத்திலேதினநின்றிடக்கிருபைசெய் கந்தனே

ஐந்தாசையாலேபலதாழலாமலே
செந்தாமரைத்தாளைத்தெரிசிக்கவந்தருள் கந்தனே

மாயைக்கப்பிரவிக்கடலிற்புரளாமலும்
பாசத்திலேமனம்பற்றிடமுற்றாமல கந்தனே

ஐயருணகிரிநாதனுக்கருளு
மெய்யீதெனவருளும்விதமெனக்கருள்செய்யும் கந்தனே

நாயினேன்செய்பிழைநாடாமலென்றுளம்
கோயிலாக்கொண்டுகுடியிருந்தருளிய

கந்தனேகுமரா எனைமுற்றுங் காக்குங்குருபரா

இராகம், சங்கராபரணம், திரிபுடை, தாளம்

பல்லவி

கருணாகடாட்சம்வைத்தாக்ஷோத்தெனைரட்சியும்
காங்கேயனேகுருஞானசித்திக்கடவுளே

அநுபல்லவி

அருணாபுரியில்வாழும் அருணகிரிநாதர்க்கு
அருளுபதேசஞ்செய்த ஆறுமுகதெய்வமே கரு

சரணங்கள்

அகண்டபரிபூரணானந்தசின்மயரூப
ஆதிமுதற்பொருளே அதிகமகிழ்வுடனென்றனை கரு

மனபுத்திசித்தமெனுமகங்காரபுலிகளையும்
வந்தணுகாமலுன்றன்மலரடிபாதநம்பினேன் கரு

இராகத்வேஷமெனுமிராக்ஷதனைச்செயிக்க
இராப்பகலற்றிடம்வைவிராமச்சாதிரம்மருகா கரு

ஆங்காரக்காட்டிலுளைம்புலக்கள்ளர்கையில்
அறிவெனும்கலங்கொடுத்தலையாமலன்புடன் கரு

காமக்குரோதமோகாதிபன்றிகரிக்குங்
கலங்காதிருக்கவருள்திருவடிவேலா கரு

பிறவிக்கடலைநீந்திப்பிழைக்கத்துறையேறியுன்
பிரணவசொரூபங்கண்டபேரின்பகடல்மூழ்க கரு

பொய்யர்புரட்டர்வஞ்சப்புலையுடன்சேர்க்காமல்
பொற்பாதகமலத்தைப்புகழ்வோருடன்சேர்த்து கரு

பேசாப்பெருமையானபேரின்பவெள்ளமேயுன்
பேர்புகழுந்தொண்டர்க்குப்பேச்சுக்கிடமில்லாமல் கரு

கருணைகடாட்சம்வைத்துக்காத்தெனையாட்சியும்
கார்த்திகேயவேலாகருணாநிதிக்கடவுளே கரு

இராகம், கமாசு, ஆதிதாளம்

பல்லவி

நம்பினேன்கிருபைசெய்வாய் வடிவேலப்பா
நம்பினேன்கிருபைசெய்வாய்

அநுபல்லவி

நம்பினேன்கிருபைசெய்வாயம்பிகைமகிழும்பாலகா
அம்புவிதனிலெனையுனன்பனுமருள்குமரா நம்பி

சரணங்கள்

அண்டர்புவனம்படைத்த ஆதிபராபரமேயுன்
தொண்டர்களுடனேசேர்த்து சுகமெனக்கருள்சண்முக நம்

தேவர்கள்முனிவர்யாரும் தேடியுமறியொண்ணாத
கேவலப்பொருளாய்நின்ற சேவடிதினம்புகழ்ந்து நம்

பூமிப்பிறவித்துயர்க்கும் பொல்லாயமவாதைக்கஞ்சி
சாமியுன்பதம்பற்றினேன் தற்காத்திரட்சித்தருளுவா நம்

பொதிகைமுனிபணிந்து போற்றிமனமகிழ்ந்து
சதிபருளுமுனது கருணாகடாட்சம்வைக்க நம்

பக்சனாறுமுகம்போற்ற சித்தமிரங்கியருள்
சத்திவடிவேலணிய நித்யானந்தசுகமே

நம்பினேன்கிருபைசெய்வாய் வடிவேலையா
நம்பினேன்கிருபைசெய்வாய்

இராகம், நாதநாமக்கிரியை, அடதாளம்

பல்லவி

சத்திவடிவேலனேயுன் சித்தம்வைத்தெனைக்காவையா

அநுபல்லவி

சித்தர்முனிவர்தேவர்யாவரும
தேடியுமறியாப்பதாம்தரும்
தேவனேயுனையாவலாய்நம்பினேன்
தெரிசிக்கவந்துநீபரிசுத்தந்தருள் சத்தி

சரணங்கள்

எண்ணில்லாதகோடி சென்ம
மெடுத்துப்புவியிற் [illegible] கன்ம
மெய்திடாவருள்வைதிகர்தொழு
மேகனேவள்ளிமோகனேசிவகுரு சத்தி

சற்குருசங்கார வேலனே
சகலகலையும்புகழ் சீலனே
சந்ததமுனைவந்தனஞ்செய்ய
சரணபங்கயமருள்கருணைசங்கரன்மகிழ் சத்தி

சிங்கமுகனுடன்கயமு கனும்
கிரியுஞ்சூரபத் மனும்
சேர்ந்தபடைகளும்பேர்ந்துவிழும்படி
செய்யுங்குமரனேவையந்தனிலென்றுஞ் சத்தி

வஞ்சமாயையிருளை நீக்க
யுளருஞானமுதய மாக்கு
வள்ளலேயன்பருள்ளத்தின்மேவிய
வானவனேயென்னைதானைக்கிடுஞ் சத்தி

அளவிலாதஆசை யாலே
அலைகடலிற்றுரும்பு பாலே

கலைநிறைமதிநிலவொளியையும்
ஆறுமுகவனை ஆறுமுகப்புகழ்

சத்திவடிவேலனையுன் சித்தம்பாலத்தெனக்கீட்டலையா

இராகம், ஆனந்தபைரவி, ஆதிதாளம்

பல்லவி

குமாரகுருபரா முருகா இன்பம்
கொடுத்தருளுமினி மருகா

அநுபல்லவி

அமரர்முனிவோர்களும்போற்றும்
விமலனருளாலெங்கும்தோற்றும் (கும)

சரணங்கள்

மங்கைமயலாற்றிரிந்து சங்கையில்லாமேபரிந்து
கொங்கைமருவிப்பிரிந்து அங்கப்பலநோய்சொரிந்து
பங்கமவாமலையதமெனக் கருளே
யெங்குநிறைந்தநிதிருபரம் பொருளே (கும)

வஞ்சர்முகம்பாராமல் நெஞ்சிற்றுயர்வாராமல்
அஞ்சும்பிரிசோராமல் கொஞ்சநாசேருமல்
கஞ்சமலர்ப்பதத்தைகருத்தில்விளங்க நாட்டி
தஞ்சமென்றெனையேயுக்காழக்கவருளுங் காட்டி (கும)

துன்பவினைக்காளாகா இன்பசுகந்தவாகா
அன்பனெனவேபோகா உன்பாதமருளேகா
முன்புகழமரர்மொழிக்கருள் குகனே
யென்புகழ்தினமுமேற்குஞ் சண்முகனே

குமாரகுருபர முருகா இன்பங்
கொடுத்தருளு மருகா

இராகம், மாஞ்சலசு, ரூபகதாளம்

பல்லவி

முருகையனேமனதிரங்கி
முற்றிலுங்காத்தருள்மெய்யனே

அநுபல்லவி

அருளுருவாயுலகனைத்தும்
உளமிற்றுறவாய்நிறைந்த (முரு)

சரணங்கள்

பாசவினையால்மனதுபாவியெக்கு ரோடாமல்
மோசமடவார்மயலில்மூழ்கிநின்று வாடாமல்
நேசமில்லாலோபியனைநினைந்தென்றும் தேடாமல்
பூசைநலமறியாதபுலைபரையுங் கூடாமல் (முரு)

கண்ணுள்ளபோதேகாட்சிகாணவுநல்வழி காட்டி
மண்ணுள்ளாசாபாசங்களில்மயங்குவதெல்லா மோட்டி
விண்ணிறொளியிலொளியில்விளங்குமதியை நாட்டி
யெண்ணுமடவாதெனக்குளின்பநிலையைக் கூட்டி (முரு)

வண்ணமயிலேறிவருர்வானவர்சேனா பதியே
கன்னல்மொழிவள்ளிபங்காகதிர்வேல்கருணா நிதியே
இன்னமும்பராமுகமாகுமோஏழைக்கிரங்கிடுங் கதியே
அன்னையிலுர்தயையுடையஆறுமுகசு பதியே

முருகையனேமனதிரங்கி
முற்றிலுங்காத்தருள்மெய்யனே

இராகம்-காம்போதி-மட்டைதாளம்

பல்லவி

முருகாதிருவருட்கண்பாராயா என்னை
முற்றுமனதுவைத்துக்காராயா

அநுபல்லவி

குருவாயெழுந்தகுறுமுனிவர்க்குபதேசித்த
குமரேசனேயுமையாள்குழந்தையெனவுதித்த (முரு)

சரணங்கள்

பெற்றபிள்ளைகள்நூறு குற்றமேசெய்தாலும்
பிழையென்றெண்ணாமலேபொறுத்தருளுந்தாய்போலும்
சற்றேனுங்குற்றநான் செய்தேனேயானாலும்
தயையுடன்பொறுத்துநீ தற்காத்தருள்மென்மேலும் முரு

உடலெடுத்தநாள்முத லொருசாண்வயிர்வளர்க்க
உழன்றுதிரிந்தேனினி உனைத்தினமுந்துதிக்க
திடமனமுஞ்செல்வமும் திருவருளுங்கொடுக்க
சிந்தைமகிழ்ந்தென்முன்னே வந்தருளுஞ்சிறக்க முரு

சரியைகிரியையோக சாதனையுந்தெரிந்து
சருவநீயாய்விளங்கும் தன்மைஞானமறிந்து

ஒருமையாகமனதை பொன்றிலொன்றாய்ப்பொருந்த
மொருவனேயாறுமுக முள்ளத்திலேயிருந்து
முருகாதிருவருட்கண்பாரையா-என்னை
முற்றுமனதுவைத்துக்காரையா

இராகம்-காம்போதி-மட்டைதாளம்

பல்லவி

ஆறிவார்முருகையா நின்மகிமை
அடிமைநானேயறியேன்

அநுபல்லவி

பாரிபாப்டாஞ்சோதியருப்பொருளே
பழனுபுரியில்வாழும்பரமகுருகுருளே (ஆர)

சரணங்கள்

வானுகிப்புவிபுனல் வெளியுங்கனலுமாகி
வளர்சராசரமெல்லாம் வைத்திருந்தருளாகி
ஞானுகியுடலுயிருணர்வு மானந்தமாகி
ஓங்காரத்துள்ளொளியி னுள்ளேயுருவமான (ஆர)

ஆயிரத்தெட்டண்டமு மாண்டசூரனைவென்று
அமராபதியிந்திரர்க்கு அரசுகொடுத்துநின்று
கோயிலாயெனதுள்ளங் குணக்குன்றமாபொன்றுங்
குடியிருந்தருளிய கோலத்தைநினைக்கின்ற (ஆர)

தேசத்திலுள்ள ராசருங்கூடி
திருமுடிக்கபிஷேகஞ் செய்யத்தைமாசந்தேடி
பூசகாளினிலுப வாசத்துடனேகோடி
புனுகுகாவடிகொண்டு பூசிப்பாருனைப்பாடி (ஆர)

சூலைகருங்குட்டமும் கோஷம்கம்பற்கூச்சல்
சோகைமூலமலடு சுகசன்னிமுறைக்காச்சல்
மாலைக்கண்மேகமும் வாய்வுசைகாலோய்ச்சல்
மாருவியாதியெல்லா மாற்றுவாயனுநீற்றால் (ஆர)

சமைத்தமீனுயிராகுஞ் சர்க்கரையும்பொன்னுகும்
சந்தனம்தேனுகும் தண்ணீர்பன்னீராகும்
அமைத்தபாற்காவடிக் கறுத்தநாவும்வளரும்
ஆறுமுகஞ்சந்நிதி ஆனந்தவதிசயம்

ஆறிவார்முருகையா நின்மகிமை
அடிமைநானேயறியேன்

## இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

### கண்ணிகள்

கிருபாகரபரமானந்த சீலா
கிரிகூருடல்பொடிசெய்திடும் வேலா
வருவாய்தினகடனமயின மேலா
னைசமலர்ப்பதவேயனு கூலா

தண்ணார்கடம்பணிபுங்குரு நாதா
தமியேனேக்காத்தருள்ஞான போதா
கண்ணார்தனிமுகலேயெனே மாதா
கருணையில்வந்தனுகாவா நீதா

கந்தாகரன்செவியிற்பிரணோ தேசா
காமலயனும்மராபணியு மீசா
சிங்காரகுஞ்சரிநாயகி நேசா
திரிலோகமும்புகழும்பிர காசா

வேதம்புகழ்பாதந்தொழ வாரும்
விண்ணோர்க்குயர்பரமசுகந் தாரும்
நேசமுள்ளவன்பர்தன்பர் சேரும்
வினைசம்புமென்றனையுங்கண்ணாற் பாரும்

முருகாவுன்றனருள்பெற்றிடுஞ் சிறியேன்
முழுதுன் அன்பனைக்கூடியே பிரியேன்
உருஞானமுடையார்தவ நெறியேன்
உனையன்றிமற்றொருதெய்வநான் குறியேன்

கலிகாலமென்றெண்ணாமலே யையா
களிகூர்ந்தெனக்கருளதந்திடு மெய்யா
வலியாரொளியேனைவருத்தஞ் செய்யா
மதிதந்தருள்வடிவேலணி கையா

## இராகம்-பூபாளம்-ஜம்பைதாளம்

### பல்லவி

ஐயனேகிருபைசெய்யும் ஆதிசத்திவேலவனே

### அநுபல்லவி

துய்யனேயுனைநம்பும்தொண்டர்கடினம்துதிக்க (ஐய)

### சரணங்கள்

திருப்பரங்கிரிபழனி சேந்தூர்குன்றுதோறாடலும்
மருக்கமழ்சோலைமலையு மாதிருவேரகம்வாள் (ஐய)

வள்ளிதெய்வானைமகிழ    மயில்மேலேறிவந்தெனக்கு
தெள்ளுதமிழ்தந்தருள்    திருக்காஞ்சைப்பதியில்வந்த (ஐய)

உன்னிருபதத்தையுன்னி    உறுதியாய்நம்பியவென்னை
பன்னிருவிழியால்நோக்கிப்    பாதுகாத்தருள்புரியும் (ஐய)

வாக்குமனமணுகா    வான்பொருளானந்தமென்னும்
தேக்கும்படியருளுந்    தேவர்சிகாமணியேயென்

ஐயனேகிருபைசெய்யும்    ஆதிசக்திவேலவனே

இராகம்-ஆரபி-ஆதிதாளம்

பல்லவி

உன்னையல்லாமலினிவேறேதெய்வங்களென்றன்
உள்ளத்தினினையேனையா

அநுபல்லவி

அன்னைசர்ப்பந்தன்னிலே    முன்னோரட்சித்தாயிந்த
அகந்தனிலெனையு    மடிமைகொள்ளவேவந்த (உன்)

சரணங்கள்

துட்டமனக்குரங்கு    யெட்டிபோடுதேபத்தி
சுகந்தருமறிவையும்    தொடர்ந்திழுக்குதேபுத்தி
விட்டகுறையோவென்று    விசாரிக்கிறதேசித்தி
விளங்கவந்தருடரும்    வேலாயுதனேமுத்தி (உன்)

வல்லசுரரைவென்று    நல்லமலனாய்ப்பண்டு
வானுலகினிற்குடி    வைத்தாய்மகிழ்ச்சிகொண்டு
கல்லொத்தமனந்தனை    கரைத்தவடிமைத்தொண்டு
கருதிச்செய்வருளுங்    கருணைபரிவாகங்கண்டு (உன்)

இன்பசுசுரூபமா    யன்டர்முன்னேயெழுந்து
திருசரணிற்கிண்கிணி    யிலங்கமிகவளர்ந்து
துன்பவினைகடிர்க்குஞ்    சுவாமிவிழிகுளிர்ந்து
தோகைமயின்மேல்வந்து    சுகமருளுமகிழ்ந்து

உன்னைபல்லாமலினி    வேறேதெய்வங்களென்றன்
உள்ளத்தினினையேனையா

இராகம்-அசாவேரி-மட்டைதாளம்

பல்லவி

இன்னமனதிறங்கவெத்தனைநாள்செல்லும்
இப்போதெனக்குச்சொல்லும

அநுபல்லவி

வன்னமயில்வாகனு — உன்னையேநம்புவோர்க்கு
அன்னைபோலேயிருக்கா — யென்னைரட்சிப்பதற்கு (இன்)

சரணங்கள்

தந்தையன்னைவயிற்றில் — வந்துநாட்குறியாதோ
அந்தநாளிதுவரை — கந்தாநீயறியாதோ
தொந்தவினைபோமெனை — நொந்ததுதெரியாதோ
சிந்தைமகிழ்ந்துயின்பந் — தந்தருள்புரியாதோ (இன்)

ஈனமுல்வயற்றி — லானபசியினாலே
போனகம்பொருள்வேண்டி — ஞானமூணராதாலே
கானலேசலமென்று — மானலைவதுபோலே
நானலைபாசுரகீ — தானருளபுவிமேலே (இன்)

அல்லும்பகலுன்னாமஞ் — சொலலித்தினந்துதிக்க
அல்லலறுத்தென்னாளுந் — தொல்லுலகமதிக்க
நல்லபாமாலைபுனை — வல்லபமும்விதிக்க
நில்லுமென்னகந்தனி — லெல்லாப்பொருளுதிக்க (இன்)

சத்திவேலாயுதாநின் — பத்தர்போலவேகாக்க
சித்தங்களிற்கிருபை — வைத்துன்கண்ணாலே பார்க்க
எத்தலத்திருந்தாலு — நித்தமென்புகழேற்க
இத்தினமேவந்தரு — ளுத்தமருடன்சேர்க்க (இன்)

தேவர்முனிவர்பெண்டு — யாவரையும்பிடித்து
காவற்செய்யாமற்சூரன் — மூவரையுமடித்து
சேவற்கொடிமயிலுந் — தாவயேறிநடித்து
பூவாறுமாறுமுக — தேவாலங்கொடுத்து

இன்னமனதிரங்க — யெத்தனைநாட்செல்லும்
இப்போதெனக்குச்சொல்லும்

இராகம்-ஆனந்தபைரவி-ஏகதாளம்

பல்லவி

ஆனந்தமானபரம்பொருளே — யென்றன்
அகமகிழவேதிருவருளே

அநுபல்லவி

தானந்தஞானந் — தழைக்கவன்பருக்கென்றுந்
தருகுருபரசரவணசண்முகமாய்நின்ற (ஆன)

நெஞ்சிலானந்தவெள்ளம் நிரம்பிமிகமகிழ்ந்து
நித்தியமாறுமுகம் பத்தியுடன்புகழ்ந்து (சரண)

இராகம்-பிலஹரி-ஏகதாளம்

பல்லவி

முருகா திருவருட்கண்பாராயா-முகமலர்ந்தன்புடனே
முருகா திருவருட்கண்பாராயா

அநுபல்லவி

சரணாகதியென்றுனதுபதத்தை
சந்ததம்புகழ்ந்துசிந்தித்தேன்மகிழ்ந்து (முரு)

சரணங்கள்

மண்ணிலனந்தஞ்சன்மங்க ளெடுத்து-பொல்லாதவஞ்ச
மாதர்தமையுங்காதலா யடுத்து
எண்ணுதற்கொணாவிருந்த குற்றமும்
ஐம்புலமனமிரக்கி நித்தமும் (முரு)
ஆதியுருவான மூலமே-எங்குந்தானாய்
அமர்ந்தவருளான கோலமே
நீயேயடியேனும் போற்ற
நித்தியானந்தசித்தந் தோற்ற (முரு)
வஞ்சமாயைதன்னி லென்னையும்-விடந்துழலநீ
வருத்தாதென்னைசெய்வே னின்னையும்
அஞ்சலிசெய்துவணங்குவ தென்றும்
ஆறுமுகந்தமிழ்க்கருள்செயு மின்று (முரு)

இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி

கிருபாநிதி கிருபைசெய்வாய்வேலா
கிருபாநிதி கிருபைசெய்வாய்வேலா

அநுபல்லவி

கிருபாநிதியுனது
இருபாதமகதி

சரணங்கள்

சத்திசிவமாய்நின்று
எத்திசையும்படைத்து
பத்திசெயுமன்பர்க்கு
முத்தியருளவந்த

கன்பந்தத்தினாலே
சன்மமெடுத்துழந்த
வன்மனக்கள்ளனையு
நின்மலஞ்செய்வதென்றோ — கிர்பா

மாதராசையாம
தூர்கபடங்களில்
காதல்கொண்டுழலாமல்
ஆதரவுசெய்யும் — கிர்பா

வஞ்சர்தம்மைப்புகழ்ந்து
நெஞ்சமயராமலே
அஞ்சலெனவுனது
செஞ்சரணமருளும் — கிர்பா

மாயாப்பிறவிவஞ்சவாழ்வி
லோயாக்கவலையினால்
போய்த்திரிந்தலையா
சேயாய்நீவந்தருள்வாய் — கிர்பா

ஆராலுமுடியாத
சூராதிசூரன்றனை
ய்வரோடுகளைந்திட—
போர்வேல்விடுத்தவனும் — கிர்பா

எல்லாநீயாயிருந்து
சொல்லாமாயைசெய்து
பொல்லாவினையகடும்
கல்லாபனமென்றந்தாய் — கிர்பா

சின்னஞ்சிறியவர்கள்
என்னபிழைசெய்தாலும்
அன்னைபோலேபொறுத்து
என்னைரட்சித்தருளும் — கிர்பா

இராகம்-வராளி-ஆதிதாளம்

பல்லவி

மறவாதிருமனமே — யனுதினமும்
மறவாதிருமனமே

அநுபல்லவி

பிறவாநெறிதரும் — பிரமானந்தமுருகன்
பேரின்பநிலைதனைத் — பிரகாசிருக்குருகன் (மற)

சரணங்கள்

மக்கள்மனைவியோடு மருவியேயிருந்தாலும்
மாறாதசெல்வத்தின் மகிழ்ச்சியிற்சிறந்தாலும்
தக்கோர்புகழுஞ்சார்வ சிவதயாநிதி
சண்முகன்பதந்தன்னை சார்வதாய்துதிக்கி மற

பொய்புலகந்தனையே மெய்யென்றெண்ணாமலும்
புலையுங்கொலையும் களவுசெய்யாமலும்
ஐம்மதத்தியே அருவருவிலேசேர்ந்து
அத்துவிதவானந்த சித்தத்துடனிருந்து மற

துட்டரறிவுபற்றி தொடர்ந்துநீதிரியாதே
சுகந்தேடுவனைதவிட்டு துன்பத்தைக்குறியாதே
சிட்டர்தொழுந்திருக் கார்த்தையம்பதிவாழும்
சிவசுப்ரமண்யர்சீர் பாதந்தனைநாளும் மற

இராகம்-நாதநாமக்கிரியை, ஆதிதாளம்

பல்லவி

முருகனையேநினைமனதே முற்றிலுநம்பி
முருகனையேநினைமனதே

அநுபல்லவி

முருகனையேநினை முன்செய்தவினையினால்
வருமேபிறவிவா ருதியிலமூழ்காமல்-முரு

சரணங்கள்

குருபரனுகவே குவலயம்தனில்வந்த
திருவருள்பதந்தன்னை தெரிசிக்கவேண்டி-முரு

சங்கரர்மகிழ்ந்திட சரவணையிலுதித்து
மங்களமாகவே வள்ளியைமருவும்-முரு

சரவணபவனே சண்முகனேகுகனேயென
வருமோட்சபாக்கியம் வண்மைபதாக-முரு

அண்டர்முனிவர்கள் கண்டதிசயமென
மண்டலமகிழவே மயிலினடமிடும்-முரு

அருட்டருங்குமரனே ஆனந்தரூபனே
கார்த்தையம்பதிவாழுங் கதிர்வேலனடிபோற்றி

முருகனையேநினைமனதே முற்றிலுநம்பி
முருகனையேநினைமனதே

இராகம், தோடி, ரூபகதாளம்

பல்லவி

நம்பிவிசாரமேமனமே தெய்வயானைத்தவனை, நம்பிவிசாரந்தேமனமே

அநுபல்லவி

அம்பிகைபாலன் பாலன்புவைத்துலவை நம்பி

சரணங்கள்

சந்ததமெய்க்குருவிறுடனுயிர் கூடி வந்து
தரணியிற்றவமியற்றிய தேடி
செங்கலர்க்குழல்மங்கைசொன்னசையை நாடி சென்று
கொங்கைதுயருற்றுய்ச்சிற்றின்பக்கவி பாட நம்பி
பிறந்துதுயரில்வருந்துவதையு நோக்கி, யென்று
பிழைபாவபிறன்மனையாசையை போக்கி
அறக்கவழக்கவளர்சாமிக்கா ளாக்கி அவர்
அடியார்க்கடியனையரு ளாக்கி நம்பி
என்புதோல்தசையிரலுக்குடலுஞ் சேரும், சடம்
இருவினைக்கிடமாமெண்ணிப் பாரும்
அன்புற்று நமுகக்கவிக்கருள் கூறும் முருகன்
அருளபோற்றிருபோரு மூறும்
நம்பிவிசாரதேமனதே யிக்காயத்தை நம்பிவிசாரதேமனதே

இராகம் பைரவி ஆதிதாளம்

பல்லவி

முத்திதருஞ்சிவசத்திவேலனை நித்தநினைமனமே

அநுபல்லவி

சித்திவருநல்லபுத்திதருமெங்கள்
சர்த்தன்குருபரனித்தனருளினால் முத்தி

சரணங்கள்

காலன்றனையுதைத்த நீலகண்டன்மகிழும்
பாலன்பரிபூரண கோலனன்பர்க்கிரங்கும்
சீலன்குறுமுனிக்கு மூலமந்திரஞ்சொன்ன
வேலனென்றவக்குறு கூலன்றனைப்புகழ(முத்தி
மண்டலத்தவர்களும் விண்டலத்தவர்களும்
கண்டிறைஞ்சியேதினம் தொண்டுசெயவருளும்
கொண்டல்வண்ணன்மருகன் தெண்டபாணிமுருகன்
தொண்டனுக்கேவலியும் தெண்டனிடவெனாளும்(முத்தி

ஜங்கமேர்க்கு வந்துவரமுகவும்
கந்தன்மலரப்பதத்தை சந்ததமுந்துதிக்க
தொந்தவினையகற்றி சிங்காதனஞ்செய்ய
மெஞ்ஞானகுமரகுரு தந்தைதிருவருளினால்

முத்திதருஞ்சிவசத்திவேலவா சித்தந்தனைமனமே

இராகம் புன்னாகவராளி ஆதிதாளம்

பல்லவி

மனமேநீயேன்மயங்குறாய் பொய்வாழ்வைநம்பி

அநுபல்லவி

வலைமான்போலேதயங்குறாய்

சரணங்கள்

தனமென்றுடலை பெண்ணி
தரணியாசையை நண்ணி (மன
எத்தனைதவஞ்செய்தோ இத்தேகத்துடன்கூடி
சுத்தவறிவாஞ்ஞானம் தோன்றினதுணராமல் (மன
மாதுமக்கள்மனையு மனைவியராசையும
கூடிவிட்டுயிர்போனாற் கூடவருமோசொல்லு (மன
பிறந்திதுவரைக்கு பெற்றபலன்கண்டாயே
சிறந்தினிமேலாகிலுஞ் சிவசண்முகனைப்போற்று (மன
பலநோய்க்கிடமாக பாவையர்க்கன்புவைத்து
இலகுலக்களிப்போ லிருந்துமனஞ்சலித்த (மன
ஆர்புகழ்ந்திகழ்ந்தாலு மாவலிதென்னகமத்து
சீர்தருமுருகையன் திருவருளிருக்கையில் (மன
சரவணபவகந்த சாமிகுமரகுரு
பரனிருசரணமலர் பணியவரமருளும

மனமேநீயேன்மயங்கிறாய் பொய்வாழ்வைநம்பி
வலைமான்போலேதயங்கிறாய்

இராகம் கல்யாணி ஏகதாளம்

பல்லவி

நானெத்தனைபுத்திசொன்னாலுங்கேளாமல்
நாடோறுமலைகிறாய்மனமே

அநுபல்லவி

மானத்தன்கதன்முருகேசன்கிருபைபெற்று
வாழ்ந்திருக்கலாஞ்சோலைசூழ்ந்ததரங்கைதனில் நானெ

சரணங்கள்

காமலைகளெங்கு மோடித்திரிந்துநீ
கவலைபடாமலென் கவலைநெஞ்சமேசேறு
சேமகான்மறைகாறு சின்மயானந்தனே
சிந்தையிற்கண்டுநாம் வந்தனஞ்செய்திட நானெ
இருவினைப்பயனாலே யெடுத்தவுடம்பிதற்கு
மின்பதுன்பங்களுமிடையே யிடையேதோன்றி
கருவில்வந்தடைந்தபின் காசினியிற்பிறந்த
சன்மபாவந்தீர்ந்து சன்மசாபல்யமாக நானெ
குறுகொலைகளவு ஞாப்புத்திகாமத்தால்
துலைபாதகன்மத்தை நீலைபாமற்செய்கின்ற
சாதுசங்கத்தவ ரோதித்தொழவருளும்
சண்முகசிகாமணி சண்மணியனைக்காண
நானெத்தனைபுத்திசொன்னாலுங்கேளாமல்
நாடோறுமலைகிறுப்மனமே

இராகம்-சங்கராபரணம் ஆதிதாளம்

பல்லவி

முருகனைத்தினந்துதிமனமே-யுன்றன்
மிருவினைகளறுமிக்கணமே

அநுபல்லவி

காறுகாங்குமரன்கார்த்திகேய னிரு
சாறும்புயத்தைநம்பிசார்வதாய் மகிழ்ந்திரு (முருக)

சரணங்கள்

காமம்வெகுளிதனை யொழித்து-தினம்
போத்திஞானக்கண் விழித்து
நிலையுலகவாழ்வைப் பழித்து-யென்றும்
சேமமாகவேநின்று செழித்து
தேமலர்நிறைசோலைதிவப்புனந்தனில் வாழும்
கோமங்கைவள்ளியைக்கூடிமணஞ்செய் தாளும் (முருக)
ஆங்காரத்தாலனேகம் கோடி-அதில்
பேங்காமலெந்தையருள் தேடு

தீங்கானுவங்கள்வளர் காயி-தேகம்
நீங்காமலசலத்தின் கூடு
ஓங்காரத்துட்பொருளையுகந்துபரமத் கோதும்
கார்த்திகேயன்புகழைக்கருத்தினினைந்தெப் போதும (முருக)

வஞ்சனைபொருமைமோபம் விடுத்து-நல்ல
நெஞ்சுடன்பெரியோர்களை யடுத்து
தஞ்சமென்றிரப்பவர்க்குக் கொடுத்து-டெண்ணை
கொஞ்சியேகுணம்பலவுந் தடுத்து
அஞ்சலிசெய்துசித்தம ஆறுமுகர் துதிக்குஞ்
செஞ்சேவற்கொடியேன்றிருவருள்வந் துதிக்கும (முருக)

இராகம் தன்னியாசி-ஏகதாளம்

பல்லவி

தினந்துதிசெய்மனமே-குருபரனே
தினந்துதிசெய்மனமே

அநுபல்லவி

தினந்துதிசெய்மனதேதேவர்தேடும் பொருளை
யினந்துக்கொண்டனுதினநீங்காமலே யருளை (தினம்)

சரணங்கள்

கள்ளப்புலன்வழியே கருத்தசையாமற்கொண்டு
உள்ளத்திலுள்ளே ஒளியிலிருவருங்கண்டு (தினம்)
பிறவிப்பெருந்துயரை முறையிட்டோடவருளும்
மிறைவன்றன்னுமத்தை யிதயத்திற்புகழ்ந்துநீ (தினம்)
ஆசைவலைதனி லகப்பட்டுமயங்காமல்
நேசம்சுழியில்வைத்து நிற்குமானந்தங்கண்டு (தினம்)
இன்பமாகவுலகையெண்ணி யேகாமநெஞ்சமே
துன்பத்திற்கீடாளுப் சுகம்பெறவிருந்தினி (தினம்
அண்டபரிபூர ணானந்தமயமாகி
சுகமண்டமுநிறைந்த திருவருள்முருகனை - தினம்

இராகம்-காம்போதி-ஆதிதாளம்

பல்லவி

இந்தசனனத்தில்மனதேயிறைவனருள்பெற்றுக்கோ
ளினியெந்தசன்மம்வருமோ

வள்ளிக்கொடிசுற்றி வளருந்திருமருந்து
வாசவன்யானையும் வணங்கவாழுமருந்து
துன்றுமெமன்பாசத்தை தள்ளிவிடுமருந்து
தோடருமிருவினையை யிடறச்செய்யுமருந்து- பிற

அருணகிரிநாதனு மன்பாய்க்கொண்டமருந்து
அகிலாண்டகோடிக்கு மாதியானமருந்து
கருணையாலாறுமுக நாசம்புகழ்மருந்து
கைலாசகிரிதனில் மலைமேல்வாழுமருந்து- பிற

பிறவாதிருக்கவொருமருந்துண்டதைமனமே
பேசாதேகொண்டுபிரமானந்தமுனமே

இ-ம்-மோகனம்-மட்டைதாளம

பல்லவி

இல்லமயக்கமுனக்கேன்மனமே சும்மா
யிருக்கபடியிருந்தாற்சுகமுனக்கே

அநுபல்லவி

வல்லபிதாகுரு தெய்வமாகவிளங்கும்
ஆறுமுகதேசிக னருளைக்கண்ணாற்கண்டும்-இல்

சரணங்கள்

சொல்லாமற்குருசொன்ன சுகத்தைநினைந்துகொண்டு
சூட்டுமூலவனலாற் சோமனமிர்தமுண்டு
நில்லாதநீமோட்ச நிலையிலிருந்துபண்டு
நேசத்திருப்பதெல்லா நெகிழவிட்டுச்செய்தொண்டு(இல்

வினைவசத்தாலேநீ வெகுசன்மங்களெடுத்து
மேதினியிலனேக விசனப்பேய்கள்பிடித்து
உனைத்தினம்துன்பத்து ளாயாமலேவிடுத்து
உணர்வில்லாமலலைந்தா யுயர்வேதங்கள்படித்து(இல்

மனைவிமக்கள்சுற்றம் வாழ்வுஞ்சந்தையிற்கூட்டம்
மண்ணோர்மன்னவர்கண் மகிழுந்தண்ணீரோட்டம்
நினைவில்யாவுமநிலை யல்லவென்றேநாட்டம்
நிலைக்குள்ளேமுருகைய னிருத்தம்பார்கொண்டாட்டம்(இல்

துன்பம்விளைக்குந் துற்குணத்தையெறிந்துபோடு
தொலையாப்பிறவிநோயை தொலைக்கமருந்தைதேடு
இன்பமிதையளவு இசற்காயிததனைபாடு
எனக்கிர்க்கும் குருபாலிருசரணடு(இல்

துதிக்குமடியவர் துயர்களைந்திடும்வேலன்
சுயஞ்சோதிவடிவாகத் துலங்குமாதிமூலன்
கதிக்குமதிகாரியாய்க் காட்சிகொடுக்குஞ்சீலன்
கந்தனெனைச்சிந்தைசெய் கலங்குவானோகாலன்

இன்னமயக்கமுனக்கேன்மனமே சும்மா
யிருந்தபடியிருந்தாற்சுகமுனக்கே

இராகம், காம்போதி-மட்டைதாளம

பல்லவி

ஆறுமுகம்போலவுனக் காருமுகம்பார்த்தருள்வார்
அனுதினமவரை மறவாமனினையுமனதே

அநுபல்லவி

வேறுமுகமனேக மேதினியெங்குங்கண்டாலும்
ஆறுதலையாய்வருமோ ஆருயிர்க்காறுதலும்(ஆறு)

சரணங்கள்

எங்கெங்குங்காணு யிருந்துவிளங்குமீசன்
இரட்சிக்கருளுநம்மேற் பட்சமுள்ளபிரகாசன்
துக்கமிகுநல்வீரர் சூழவருமுல்லாசன்
சுரபிந்திரனைக்காத்த சுடர்வேலணியுமராசன் (ஆறு

ஆண்டமுதலாயவன்தம் பிறப்பின்விதம்
ஆனவுயிர்கட்கெல்லா மானந்தமானபதம
கண்டுமகிழ்ந்திட வருங் கந்தன்பாதமேசதம்
கனவிலுநினைவிலுங் கருதிப்புகழுமிதம் (ஆறு

அரிவைமுருகாவென் றழைக்குமுன்னுகவலும்
அருணகிரிநாதனுக் கருள்ஞானபோதலும்
தெரிவைசிகாமணி வள்ளிதேவிதவத்திறங்களும்
செந்தமிழ்நக்கீரன் றனைசிறைவிடுத்தருளலும (ஆறு

இராகம் ஆனந்தபைரவி ஆதிதாளம்

பல்லவி

விந்தையுள்ளதெல்லாநற்றுலுஞ்செய்த
வினைதனைவெல்லலாமோ

அநுபல்லவி

சுத்தமெய்ஞ்ஞானசுயஞ் சேவடிவேலர்
துய்யமலர்ப்பதத்தை மெய்யென்றெண்ணாதவர் (வித்

சரணங்கள்

அண்டமாயிரங்கோடி கணைபிறந்துவந்தும்
அகிலந்தனிலுனைமுந்த ஆதிசேடனைத்தந்தும்
கண்டங்கண்டபாவவுடன் கருவுருவாயெழுந்தும்
காணவேகூடிவிட்டு கலக்கோர்கூட்டிற்புகுந்தய(வித்)

வானவரிந்திரனை வரவழைத்தேமுன்னம்
மறந்தாயினேகந்த மனதின்படியிதென்ன
போனவுயிர்திருப்பி பிணத்தையெழுப்பியென்ன
புனிதமாகவிரும்பை பொன்னாகச்செய்தின்னம்(வித்)

அஷ்டசித்திவசியம் அஞ்சனம்வேதமந்திரம்
அக்கினிசலத்தினு மசையாதிருக்குந்தந்திரம்
அஷ்டமிருகப்பாவும் தொழுதவாமடேந்திரம்
கொட்டியமிருக்கணச் சுக்கிரஞ்சுகதரம்(வித்)

வைத்தியசருகருந்தி மலையுங்குகையுஞ்சென்றும்
வாயுவைச்சுழிமுனை மாற்றிக்கும்பித்துநின்றும்
அனேகதயிரையுங்காக்க மாறுமூகவனென்றும்
அறியாதமார்க்க ளவனியிலிருந்தெனறும்(வித்)

இராகம்-ஆனந்தபைரவி-சம்பைதாளம்

பல்லவி

மறவாமற்றினந்துதிசெய்மனமே தஞ்சை

அநுபல்லவி

அறிவோர்கள்புகழுமுருகையன்பதமுனதே மற

சரணங்கள்

பேசாவனுபூதி தந்திரத்தை-அறிய
பேரின்பநிஷ்டைதரும் பிரமந்திரத்தை
தேஜோமயமாகுஞ் சுந்தரத்தை-கண்டு
தெரிசித்துமனமகிழ்ந்து சிவகுருமந்திரத்தை மற

அண்டமெலாம்கொண் டிடத்தேசென்று-நீயும்
அசையாமலிருந்தக்கே ஆனந்தமின்று
கண்டதுவேகாட்சி யென்று-என்னை
காத்தருளவெழுந்தருளுக் கந்தர்சதமென்று மற

எங்கும்தானாய்நின்ற பூரணத்தை-உலகில்
எல்லாருமமறிந்தறியா திருக்குங்காரணத்தை

அங்கைநெல்லிக்கனி போலாரணத்தை-யுன்றன்
அறிவின்கண்ணாலறிய லாமுத்தாரணத்தை ௰௨

களங்கூட்டும்வாருகோல் போலேபொருளை
கருதிக்கொண்டேசேர்த்தாய்காசினியின்மேலே
வளம்காட்டும்குணமு மிதினாலேயுண்டோ
மயில்வாகனக்கடவுள்மலர்க்கைவடிவேலனே ௰௩

நீர்க்குமிழிபோலே யிக்காயம்இதை
நிலையென்றுயலகோடி வினைவதன்னியாயம்
ஆர்க்கார்சொல்வார்க ளிந்தநியாயம்தினம்
ஆறுமுகதேசிகன்ற னடிபுகழாதாயம் ௰௪

இராகம், கலியாணி, திரிபுடைதாளம்

பல்லவி

மனதேயேன்பிரமைகொண்டாய் இவ்வுலகத்தின்
வாஞ்சையிலென்னகண்டாய்

அநுபல்லவி

எனதுமனைவிமக்களென்றுமகிழ்ந்தணைந்து
இரவுபகலவர்களுறவுதனைநினைந்து மன

சரணங்கள்

எண்ணில்லாதகோடியெண்ணிமெலிந்து வாடி
இருந்தலுக்கஞ்ஞானஇருளுநிறைய மூடி
கண்ணில்லாற்போலாற்கதியறியாமற் றேடி
கவலைகொண்டால்வருமோகடவுள்கிருபை கூடி (மன)

நில்லாதகாயத்தைநிலையாகவே யுனது
நெஞ்சினில்மறவாமனிதியின்மேலே மனது
கல்லாதமூடர்யோற்கருதிச்சென்று லுனது
கல்விபறிவைநல்லோர்கண்டுநகைக் கெனது (மன)

தோலுமெலும்புதசைசுக்கிலமும் கூட்டி
தொந்தவினைக்கயிற்றாற்றொடர்ந்துவளர மாட்டி
மாலின்மனைவைபடவைத்தான்றக்குவ நாட்டி
வகுத்தறியாமலிதையுந்தெனைப்பிடித் தாட்டி (மன)

தனக்குள்ளேகுருபான்சன்னிதியு மறிந்து
தானதுவாய்நின்றசரணின்மலர் சொரிந்து
மனக்கிலேசங்கள்யாவுமாற்றித்தியானத் திருந்து
வணங்கித்துதித்தாற்சன்மம்வராதெனவு மறிந்து (மன)

தூர்க்குணத்தால்வந்த சூழ்ந்தபிறவியென்று
சுருதியாகமநூலிற்சொன்னதறிந்து நின்று
சற்குருவருட்பெற்று சன்னிதிக்குள்ளே சென்று
சந்ததமுமாறுமுகதரிசனம்செய் தின்று
மனமேயென்பிரமைகொண்டாய் இவ்வுலகத்தில்
வாஞ்சையிலென்னகண்டாய்

இராகம் காம்போதி தாளம் மட்டை

பல்லவி

ஆறுமுகசாமிதனைபணிந்துகதிபெற வென்
ஆசையெல்லாம்நீபோய்ச்சொல்லியழைத்துவாபோடி

அநுபல்லவி

வேறுமுகமொன்றையும்விரும்பிநீபாராமல்
எழில்மயின்மீதிலிருந்துவிளங்குங்கந்தனை -ஆறு

சரணங்கள்

சாமம்பகலில்லாமல் காமன்கணைதொடுக்க
ஓமஞ்சந்தனிலனை பொருந்திமபலநிக்க
சேமகிட்டைமறந்து காமப்பேயும்பிடிக்க
சேமமிதிசெல்வேளுந் சேர்ந்தின்பமுங்கொடுக்க-ஆறு

திங்களுதயமாக தென்றலும்வந்துதாவ
பைங்கிளியன்னங்களும் பசுமாங்குயிலுங்கூவ
துங்கரவிக்கையுள்ளே கொங்கைவிம்முதேமேவ
செங்கைவடிவேலனைச் சேர்ந்தணைந்துவுலாவ-ஆறு

வேலர்தனைநினைந்து வேலையெல்லாமொழிந்து
பாலுமன்னமுந்தேனும் பஞ்சாமிர்தங்கசந்து
ஓலைமலையுந்தோல சேலைதலைகுலைந்து
காலுநிமிஷநாலுயுக மாகுதேவிளைந்து-ஆறு

மெத்தைமீதிலிருந்து முத்தமுத்தாகக்கொண்டு
குத்துமுலைமிம்மையைய வைத்திடப்பல்லைக்கெஞ்சி
மெத்தவிதழ்சுவைத்து நித்தங்கொக்கோகமிஞ்சி
வித்தாரலீலைசெய்க விபரஞ்சொல்லி ; யவஞ்சி-ஆறு

தேவாதிதேவன்வள்ளி தெய்வானைமகிபதி
சேய[illegible] தேவர்சேனாபதி

மூவர்முதல்வனே முத்திக்குஅதிபதி
பாவலனாறுமுகனே பணியுங்கருணாநிதி-ஆறு

இராகம் புன்னாவராளி ஏகதாளம்

பல்லவி

திருமுருகா கிருபைசெய்
அரிமருகா

அநுபல்லவி

ஒருதனிமுதல யியுலகெக்கு
முள்ளசராசரமெல்லாம்படைத்தோங்கும்

சரணங்கள்

உள்ளத்திலுன்னையுணர்வா லுணர்ந்து
ஓங்காரத்துள்ளொளிக்குள்ளே யிருந்து
தெள்ளித்தெளிந்த அறிவாலறிந்து
தெரிசனஞ்செய்யவே சிந்தைமகிழ்ந்து திரு

பொல்லாதவஞ்சகத்தையவரிடம் தேடி
புரவலனென்றேபுகழ்ந்துகவி பாடி
நல்லவயிறுவளர்க்கவுற வாடி
நாளுந்திரியாமலுன்னைப்படி நாடி திரு

தஞ்சமென்றுன்திருச்சன்னிதியில் வந்து
சரணாகதியென்றுசார்ந்தேன்மன நொந்து
நெஞ்சிற்கவலையைநீக்கியரு டந்து
நித்தமுமுன்றிருப்பத்தன்போ லுகந்து திரு

பொய்யுங்களவும்பொறாமையும் வஞ்சமும்
போக்காமலுன்பதம்போற்றிநின் தஞ்சமும்
வையகந்தனிற்பிறவித்துயர் கொஞ்சமும்
மாறுதிருக்கவருந்துமே நெஞ்சமும் திரு

நீரிலெழுத்தைநிகரான காயத்தை
நிலையென்றுநம்பியே நித்திமாயத்தை
சேரித்தெளிந்துன்திருவருள் நேயத்தை
சிந்தித்துவந்தனஞ்செய்யு முபாயத்தை

திருமுருகா கிருபைசெய்
அரிமருகா

இராகம் அசாவேரி திரிபுடைதாளம்

பல்லவி

இன்னம்பராமுகஞ்செய்யாமல் மனது
இரங்கிக்காத்தருளையா

அநுபல்லவி

அன்னைதந்தையென்றெண்ணியுன்னைநம்பியிருக்க
எந்நேரமுநேர்ந்துயாருந்தன்னையிலையிருக்க இன்

சரணங்கள்

கந்தாயிருக்குஞ்சுகமுண்டோ வென்றுனைத்தேடி
தொழுதுநானுமுருக தோத்திரங்களைப்பாடி
இம்மானிலத்திலிருகண் கொள்ளாக்காட்சிநாடி
இருக்குநீயருளுமென் னிடக்கணில்லாமற்சாடி இன்

நீதிநெறியில்லாத பேதையானாலுமுன்னை
நேசித்தபுண்ணியத்தால் பாசபந்தந்தன்னை
சோதிவேலவனருளினா லகற்றியேயென்னை
தொடருமிருவினைகளிடர்கள் செய்யாமலென்னை இன்

நாயும்பேயும்மனித னாகவவதரித்து
நாட்டிற்றன்னுருகாட்டி நானுமதிகரித்து
காயும்வெஞ்சினத்துடன் கட்குடித்துவெறித்து
கலகஞ்செய்தற்கஞ்சியுன் காதிற்கேட்கவுரைத்து இன்

பொய்குறளைவஞ்சகரும் புரட்டுந்திருட்டுங்கற்ற
புலையர்நெருங்கிவந்து வசைகள்பேசுமூர்மெத்த
அபயோவிவர்களுட னார்வருந்துவார்நித்தம்
ஆண்டவனேபார்த்தின்று அடக்கவேணுமுன்சித்தம் இன்

விருத்தம் தேவாரச்சந்தம்

திங்களுங்கங்கைகொன்றைதிகழ்பணிசடையிற்சூடுஞ்
சங்கரனருளிற்றோன்றுஞ்சண்முகக்கடவுளேநின்
பங்கயபாதந்தன்னைப்பணிந்துபாமாலைசாற்ற
இங்கெனக்கருளவந்தவிறைவனேபோற்றிபோற்றி. க

உலகிலேபிறந்துமிக்காளோதியேகலைகளாய்ந்தும்
பலபலகேள்விகேட்டும்பாழ்மனந்தடங்காதோடி
மலைவனைநோக்கிபுன்றனருட்பதந்தனிலிருத்துங்
குலவியமயூரசேறுங்குமரனேபோற்றிபோற்றி, உ

பொய்யுடலென்றுநன்றாய்ப்புத்தியிலறிந்திருந்தும்
மெய்யுணர்வில்லாதுவினைவழியுழலுவேனை
ஐயநின்கருணைகூர்ந்தடியனுக்கருட்காள
வையகந்தன்னில்வந்தவள்ளலேபோற்றிபோற்றி **௩**

சத்தியுஞ்சிவமுமாகித்தாரணியில்விளங்குமுன்றன்
சித்தியின்மகிமைதன்னைத்தெரிந்தவர்மொழியவல்லார்
பத்திசெய்யன்பர்தங்கள்பவவிருட்கிரவிபோல
முத்தியிலுதயமாகுமுருகனேபோற்றிபோற்றி **௪**

இந்திரனயனும்விண்ணோரிடுக்கண்மர்த்தருளவென்று
அந்தரத்திருந்துகாவினலர்மழைபெய்துவாழ்த்த
பந்தவேலாற்சூரன்மார்பிருகூறாய்ச்செய்து
சுந்தரமயின்மீதேறுஞ்சுவாமியேபோற்றிபோற்றி **௫**

வையமேமெய்யென்றெண்ணிமகிழ்ந்துமேயிருந்தபேதை
ஐயமேயகற்றியென்றனறிவினுளறிவாய்நின்ற
தெய்வமேமனமிரங்கித்திருவருட்கடாட்சஞ்செய்யுஞ்
சைவமேவிளங்கநின்றசண்முகாபோற்றிபோற்றி **௬**

காட்டிலேவாழுமான்கள்கானவர்வலையினுள்ளே
மாட்டியேமயங்குமாபோன்மாதர்கண்வலையிற்சிக்கி
நாட்டியேமயங்காதென்றனற்பதமருளிச்செய்யும்
ஆட்டிலேயமரவேறுமறுமுகாபோற்றிபோற்றி **௭**

வஞ்சகம்பொய்யுஞ்சூதும்வாதுமிகவேகூறும்
நெஞ்சகர்துயரஞ்செய்யாநீயெனக்காத்தல்வேண்டும்
குஞ்சரிவள்ளியோடுங்குலவியேமனமகிழ்ந்து
தஞ்சைசார்கரந்தைவாழுஞ்சண்முகாபோற்றிபோற்றி **௮**

சரவணபவனேபோற்றிசதுர்மறைப்பொருளேபோற்றி
மரகதமயிலாபோற்றிமாணிக்கவொளியேபோற்றி
துரியமுங்கடந்துநின்றசோதியேசுகமேபோற்றி
அரகரகுமராவுன்றனடியிணைபோற்றிபோற்றி **௯**

சண்முகக்கடவுள்போற்றிசாயுச்யபாதாபோற்றி
கண்மணியொளியினின்றகாங்கேயாகடம்பாபோற்றி
தண்மலர்கடப்பந்தாரைத்தாங்கியதோளாபோற்றி
விண்மதிவதனவள்ளவேலனேபோற்றிபோற்றி **௰**

ஆதியாயுலகுந்தானாயமர்ந்தருளுருவேபோற்றி
நீதியேநிசமேயெங்குநிறைந்தநிர்க்குணனேபோற்றி

சோதியே சுகமே ஞானச் சுடரொளி விளக்கே போற்றி
வேதியர் முனிவர் போற்றும் விசாகனே போற்றி போற்றி கக

சூரன்றுருகனைவென்றசுந்தரவேலாபோற்றி
பாரெலாம்புகழூர்வீரபாகுவும்பணிகாள்போற்றி
தாரகப்பொருளாமெங்குந்தனதுமுகக்கண்ணின்றெழுந்தாய்போற்றி
காரணவுமையாண்மகனேபோற்றிபோற்றி கஉ

வெண்பா.

சித்திதனிலுமைவரமேமுடனும்பதத்தை
பத்திசெயுமென்முகனைப்பார்த்துமனமிரங்கி
சித்திரமயில்மேலவாசுசிறந்தவின்பமெயயருளுஞ்
சத்திவெறுக்கெளிபெற்றசண்முகவேலாயுதனே, க

கண்டுதொழுதுபாடங்கண்வலிப்பிற்சிங்கமயல்
கொண்டுபுகலடியார்கூட்டமதிற்சேர்ந்துனைத்
தொண்டுசெயவென்றனுக்குச்சுத்திலநினைவயருளும்
அண்டமுனிவர்தொழுமறுமுகவேலாயுதனே உ

புள்ளினங்கள்கூடிப்புனைபழியாக்காத்திருக்கும்
வள்ளிவதிற்சிறந்தவெங்கருளுமுன்பதத்தை
உள்ளியுணர்ந்துஉருகுமடியார்க்கிரங்கித்
துள்ளுமயிலேறிவந்துசுந்தருகவேலாயுதனே ங

பள்ளத்தேசென்றுபடியும்புனல்போலவென்றன்
உள்ளத்தையுன்பதம்விட்டோடாமலேந்தருத
எள்ளத்துணையுமனதுவாசமாமிருந்தாற்
பிள்ளைக்கினைப்பாயாதேகசவேலாயுதனே ச

தாயாளசெல்வனேசண்முகனேயுன்பதத்தை
ஓயாமலுள்ளியுருகுமடியார்க்கடிமை
சேயனைக்கழற்றிநேசிக்கிருணைசெய்ய
சேயாவேங்கருள்வாய்தேசிகவேலாயுதனே ரு

நில்லாமனைக்குசெய்ந்தநிறுக்கநிமிஷமொரு
சொல்லாற்குருவுருத்தசுகபூரணனஞ்சநெஞ்சக்
கல்லானதுகனிந்துகனாருருகப்பார்த்தருள
வல்லானமேனைதுறைந்தைகாழும்வேலாயுதனே சு

வானோர்தாயர்த்திரவங்கருளுமுன்னடியைத்
தேனோமலர்சாற்றித்தினமமனைமகிழ்ந்து
கானேருதிவணங்கநன்னினைவிந்தருளுஞ்
சேனைபதித்தலைவர்தேசிகவேலாயுதனே எ

சித்திரம்போனின்றுமுன்றன் செங்கமலப்பொற்பதத்தை
புத்தியிலேகண்டுமனம் புகழ்ந்தோராருமுளவோ
நித்தியமுங்கந்தசைதனி னின்றுதவஞ்செய்வார்க்கு
முத்தியருளுங்குருவா மூர்த்திவேலாயுதனே ௮
உள்ளத்திலுள்ளே யொளிரும்பரிபூரணமாய்
உள்ளும்புறமுமெங்கு மொன்றாய்நிறைந்தவுனை
கள்ளப்புலனடக்கிக் காணுவாருமுளவோ
வள்ளிமணாளனென வந்தவேலாயுதனே ௯
இன்பமிகையுளதென்றெண்ணாமலேழைமனந்
துன்பம்பலநாள்விளைக்குந் தோகையர்க மாசையினில்
என்புமெலிவுறயதுபோ லேக்கமலுற்றனுட
அன்புவைத்துக்காத்தருளு மறுமுகவேலாயுதனே ௰
என்பத்துநான்குலக்ஷ மெடுத்தசடம்புவியிற்
புண்பட்டுழல்வதெல்லாம் போக்குமருந்தொன்றதுகேள்
மண்பிட்டுக்கேசுமந்த வள்ளல்சுகனார்பதத்தை
நன்புற்றிருமனமே நல்லமருந்தாமிதுவே ௧௧
புள்ளிமானீன்று புள்ளிற்கிளிபோட்டும்
வள்ளிக்கரசேயென் மனதின்கவலைதனை
தள்ளியுனதுபய சரணகமலாயத்தை
உள்ளின்மறவாதிருக்க வுணர்வருள்வேலாயுதனே ௧௨

கொச்சகம்-முற்றிற்று.

கட்டளைக்கலிப்பா,

சந்தனேகருணா கரனேயரன்
மைந்தனேமயில் வாகனனேயுனை
வந்துயானும் வணங்கிடவேயரு
டந்திரட்சியுஞ் சண்முகவேலனே ௧
வேலனே விமலனாருளிய
பாலனேபரி பூரணேயருட்
சீலனேயன்பர் சிந்தையிலேவளர்
கோலனேயென் குறைதீர்த்தருளுவாய் ௨
அருளுமாகிய வானந்தமேயெங்கும்
பொருளுமாகிய மண்ணியனேமன
விருளுநீக்க விரவியைப்போலெழுந்
சருளுகின்றவெ னுத்தமநாதனே ௩

நாதனையிச்சகுலம்படைக்கின்ற
வேதனைப்பிரணவமுன்வினவிய
நீதனேயென்றனெஞ்சினிறைக்கபொற்
பாதனேமுகம்பார்த்தருளையனே ௪

ஐயனைப்பழனமன்னையுநீயென்று
மையிலூர்தருமுருகருதித்தினம்
பாவகன்றுநற்பத்திசெய்பண்டர்க்கு
உய்யவிதினிலவர்க்கருள்செய்வையே ௫

செய்துமேவற்றிருவடிக்கேமலர்
பெய்துவந்துருகவியவன்பொடு
பெய்துபோற்றிடப்பேரின்பமேயருள்
சைவசன்வெற்றிச்சண்முகத்தெய்வமே ௬

தெய்வமென்றுனைச்சிந்தித்துப்போற்றி-
மெய்யதாயநீவிளம்பியுண்மையை
ஐயமின்றிப்பதியிலிருந்திட-
வையிலெல்லமிக்கனியெனக்காட்டுவாய் ௭

காட்டுஞானக்கதிபெற்றதலைவனை
வாட்டுமைபொடலைக்கக்காணுமும்
வாட்டமுற்றிடவெள்ளைச்சுக்கானில்
நாட்டமைத்திடநல்லருளீவையே ௮

ஈயும்பாதமிலங்குமென்றுள்ளமே
கோயிலாக்குடியிருக்கேயுனை
காயிலேனென்கண்டு ஞாக்குதிசெய்த்
தாயுமாய்நின்றதக்கருள்செல்வமே ௯

செல்வமேதென்பொதிகைமுனிவர்க்குக்
கல்வியோதியகாங்கேயனேயென்றன்
அல்லறீர்த்தருளாணக்கமேயருள்
தில்லையாடியம்தசிகமூர்த்தியே ௰

மூர்த்திபாதிபரூமயர்க்குமாரனாய்ப்
பூர்த்தியாய்வருமற்பொய்மைவிற்றேர்ந்திய
கார்த்திகைப்பாலுண்பிச்சலிக்கிடர்
தீர்த்தாட்சிக்குஞ்செவ்வேண்முருகனே ௧௧

சந்தவெண்பா

தெண்டாயுதமுடையசெவ்வேளேநின்பதத்தைக்
கண்டார்க்குநல்லகதியருள்வாய்மண்டத்தோர்

பத்தியுடனித்தமுனைச்சித்தமதில்வைத்துமகிழ்
வித்தகனேவெற்றிமுருகா ௧
செம்பதுமக்கைவளைசேர்தெய்வயானைவள்ளியம்மை
கொம்பனையாளுக்குகந்தகொற்றவனே-கும்பமுனுக்கு
முத்தமிழுரைத்தகுருமுத்தையனேசித்தமது
வைத்தெனைநீயாளுமீசனா ௨
ஆறுமுகம்பன்னிருகையாண்டவனேயுன்னைப்போ
லாறுமுகம்பார்த்தருள்வாரையனே-யாறுமுகம்
சிந்தையிலிருந்துலவெந்தமிழுரைத்துசொல
சந்ததமகிழ்ந்துஅருடா ௩

வேறு.

சந்தாகுமாரகுருநாதனேயாநீயன்பால்
வந்தாதரவுசெயவந்திடுவாய்-சொர்க்கமுடன்
அந்தரமனைமுகத்தியானையுமாதுங்கழுவும்
பைந்தாரணிகணிமார்பா ௪
முருகாவெனுமன்னைமுன்வந்தாய்மாயன்
மருகாகுறத்திமணவாளா-திரிகால
முன்னைப்புகழ்வேனுறுதியாய்வேறுதெய்வத்
தன்னைப்புகழ்வதிலேனகலன் ௫
கண்டேன்குமானையான்கண்குளிரவாணக்கன்
கொண்டேன்மனதிற்றுணைநிர்க்கென்றொண்டர்
தினவணங்கிப்போற்றுஞ்சிரகிரியிலன்பாய்
மனமகிழ்ந்துபோற்றிடவேவந்து ௬

கலித்துறை,

முருகாசரணமுதல்வாசரணமுருகுதங்கிரு
மருகாசரணமயிலாசரணமறைபுகழும்
விருகாசரணமிறைவாசரணமெனக்குநித்த
திரிகாலமுஞ்சரணஞ்செய்குவேனின்றன்பொன்சேவடிக்கே ௧
கந்தாசரணங்கடம்பாசரணநற்கார்த்திகையின்
மைந்தாசரணமலையாசரணமனமகிழ்ந்து
வந்தாள்சரணம்வடிவேல்சரணம்வரமருளுஞ்
செந்தாமரைமலர்ப்பாதாசரணந்தினமுனக்கே ௨
வஞ்சனைலோபமுடனேவாழ்க்கைகளைந்திநின்
கெஞ்சிபவர்களிடம்வருந்தாமற்றிருப்பசெல்வாய்

கொஞ்சுங்கிளிமொழிவள்ளிதெய்வானையைக்கூடியருங்
கஞ்சமலர்ப்பதத்தோனேசந்தைநகர்க்கந்தனே ௯
பாயும்புலியுங்கரடியுங்யானையும்பாம்பும்பன்றி
காயுங்குரங்குங்கழுதையுந்தேளுநரிமுதலே
பேயுங்கழுகுகாரவடிவாகப்பிறந்துசெய்யு
நோயும்பொருந்திடமோசஞ்சேர்பாதத்தைநோக்கினர்க்கே ௰

## வேலாயுதக்கண்ணி,

திருவருளானந்தமென்றுஞ்சிறந்தோங்கவன்பருக்கு
குருவுருவங்காட்டமந்தகுமர வேலாயுதனே ௧
வேலுமயிலுங்கவீரர்தான்சூழவருங்
காலுந்தியம்புமழக்கண்பார் வேலாயுதனே ௨
பூவின்மணம்போற்பொருந்தியெங்குநின்றவன்னே
நாவிற்புகழவரநல்கும் வேலாயுதனே ௩
வித்துன்மரமடங்கிவிரித்துவிளங்குவபோற்
சித்தத்துணின்றசிவதேவே வேலாயுதனே ௪
கரும்பின்மதுரமெனக்கலந்துவிளங்குமுனே
விரும்புமடியேன்வினைதீர் வேலாயுதனே ௫
பாலிநறுநெய்போற்பருகியிருக்கவுந்தன்
கோலமறையாரறிவார்குழந்தை வேலாயுதனே ௬
எள்ளினுளெண்ணெயெனவெங்குநிறைந்தவனே
உள்ளந்தெளிந்துணர்வாருயர்ந்தோர் வேலாயுதனே ௭
மாணிக்கத்துள்ளொளிபோன்மருவியென்றுநின்றவனைக்
காணத்தருவதென்றுநின்னடி வேலாயுதனே ௮
சத்திசிவமாய்ச்சமையம்பலவாமுனது
சித்தின்மகிமைதெரியேன் வேலாயுதனே ௯
தந்தைதாய்தெய்வஞ்சற்குருவுநீயெனவே
சிந்தைசெய்வார்க்கிப்பலஞ்செய்யும் வேலாயுதனே ௰
எவ்வுயிர்க்குமெய்யுயிராயிருந்துபதினாலுலகு
மவ்வுயிர்க்குந்தாயாயமர்ந்த வேலாயுதனே ௰௧
தேவாதிதேவ நின்றிருவடியைநம்புமெனைக்
காவாகுமரா [illegible] வேலாயுதனே ௰௨
வாயாரவாழ்த்திவணங்கியுனைப்போற்றுவார்
காயமெடுத்தென்னபலன்காண்பார் வேலாயுதனே ௰௩

கற்பகமேதேனேகரும்பேகனியமிர்தே
யற்புதமேயன்பேயரசே வேலாயுதனே ௧௪

எப்பொருளையும்படைத்தவிறைவியுர்களுக்கேன்
கைப்பலன்றருளியவொன்றுங்காணேன் வேலாயுதனே ௧௫

ஆராலுமுன்மகிமையறிந்துசொல்லுந்தரமோ
பாராளுஞ்செல்வபழனி வேலாயுதனே ௧௬

வானுப்புலியாய்வளிபுனலுமக்கினியா
யூனுயிராயுணர்வான வேலாயுதனே ௧௭

உள்ளமேகோயிலுணர்வேகுருபரனுக்
கள்ளமின்றியென்னுட்கலந்த வேலாயுதனே ௧௮

காந்தாகுமாராகருணாலயாபரமன்
மைந்தாவென்றுயர்மாற்றும் வேலாயுதனே ௧௯

ஆக்குவாய்காப்பாயழிப்பாயயனெழுத்தை
நீக்கிச்சிரஞ்சீவியாய்விருத்தும் வேலாயுதனே ௨௰

நானேநீநீயேநானென்றொன்றுமில்லையென்று
கோனாகவந்துரைத்த குருபரா வேலாயுதனே ௨௧

சரவணனேயென்றொருகாற்சாற்றேமனதிலுன்னி
சிரவணஞ்செய்வார்க்குமுத்திசிறந்தருள் வேலாயுதனே ௨௨

சித்தத்தினுள்ளேதெவிட்டாவமுதமென
தித்தித்திருக்குஞ்சிவமே வேலாயுதனே ௨௩

பிரமனறியாப்பிரணவத்தினுண்மைதனை
பரமசிவமகிழப்பகர்ந்த வேலாயுதனே ௨௪

கண்மணியேஞானக்கருணைத்திருவுருவாம்
விண்மணியேயென்றன்விருப்பே வேலாயுதனே ௨௫

நவவீரர்சூழநான்முகன்மாலிந்திரனும்
தவமுனிவோர்புகழுஞ்சண்முக வேலாயுதனே ௨௬

சைவம்விளங்கச்சம்பந்தனாகவந்து
தெய்வமெனப்புவிமீதிற்சிறந்த வேலாயுதனே ௨௭

தென்னவன்கூனைத்திருத்திச்சமணர்களைத்
துன்னுங்கழுமரத்திற்றாக்கும் வேலாயுதனே ௨௮

சிரகிரியின்மேவித்தெரிசனஞ்செய்வார்விரும்பும்
வரமுதவிநின்றாயூர வேலாயுதனே ௪௪

எண்ணிலலக்கோடிகலயிருந்தவிடமியாவு
கண்ணியன்பர்தமிதயமாமே வேலாயுதனே ௪௫

சூரன்முதலாய்த்தொலைபாவகாரர்களை
வேரறுக்கவந்தவிண்ணவா வேலாயுதனே ௪௬

கடன்மலையுஞ்சூரனையுங்கலங்கவடிவேல்விடுத்து
இடமுடையதேவர்சிறைதீர்த்த வேலாயுதனே ௪௭

ஆணவங்களிற்கெதிபார்க்கலின்னருளைக்
காணத்தருமோகதிர்வடி வேலாயுதனே ௪௮

அத்துவிதரூபமறிந்தேயொனுமகர்தை
பித்தருக்குமுண்டோசுகப்பேசும் வேலாயுதனே ௪௯

மந்திரமுந்தந்திரமுமறநான்குங்கற்றுமுனைச்
சிந்தைசெய்யாரந்தாற்கென்செய்வர் வேலாயுதனே ௫௰

ஆசையெல்லாந்துன்பமெனவறிந்தோர்களின்சரண
பூசையிலேயின்றுதவம்புரியர் வேலாயுதனே ௫௧

ஆசாபாசமகற்றியெனையுமுன்றன்
குருசாருடன்சேர்க்கத்தகாதோ வேலாயுதனே ௫௨

மாசற்றநெஞ்சருடன்மருவிமனமகிழும்
பேசுற்றவின்பபெருக்கே வேலாயுதனே ௫௩

மெய்யிலாப்பொய்யுடலைமெய்யெனவேசப்பிரிந்த
வையகந்தனிலுனையான்மறவேன் வேலாயுதனே ௫௪

வஞ்சனையும்பொய்யனையும்வணக்கிப்புகழாம
னெஞ்சிலுனைப்புகழ்ந்துதிப்பேன் வேலாயுதனே ௫௫

ஆனந்தக்கண்ணீரருவிபோலேயொழுக
ஞானவத்தாற்காண்பருங்கோலவேலா வேலாயுதனே ௫௬

ஐவருடன்கூடியலையாமலுன்வடிவை
கையினெல்லிக்கனிபோற்காட்டும் வேலாயுதனே ௫௭

பொய்யாமுகைகவிருட்போகவுனதருளாம்
வெய்யோனுதயஞ்செய்யவேண்டும் வேலாயுதனே ௫௮

மனவாக்குக்காயம்சல்வந்தகன்மமீக்குசற்கு
நினைமுன்புகழ்ந்துமுனைத்தேடேன் வேலாயுதனே ௫௯

ஞானதொல்லைகளாவுதார்ப்புத்திகாமம்விட்ட
நிதியுடையவர்பாவிற்கும வேலாயுதனே ௬௰

நினைக்குமடியவர்பணிவாமனின்றவர்மன்
மனத்தின்படியருளவக வேலாயுதனே ௬௧

காயமெனுங்காட்டிறைசலக்கைதப்புலவேடர்
சேவடியிலைச்செருடமெதிர்கா வேலாயுதனே ௬௨

மட்பணைகுன்சக்கரம்போலமருநற்றமன
மெட்டிளவிளைசமிடமெதங்க வேலாயுதனே ௬௩

இல்லாமனக்குசகருதின்மலமாயமிக்கொரு
சொல்லாலருள்வதெகையுறுசேதி வேலாயுதனே ௬௪

உன்னைப்பணியாவுனாவெனக்குத்தந்தகூடர்
தன்னைப்பணியாமலருளகாரும வேலாயுதனே ௬௫

உன்னையன்றிவேறுபொருளொன்றுமில்லையென்றநம்பி
சன்னிதியில்வந்தவருள்காரும வேலாயுதனே ௬௬

பொய்யடிமையில்லாப்புலவருடன்கூடி
மெய்யடிமையாவதென்றுவிளம்பும் வேலாயுதனே ௬௭

வேண்டுவதெல்லாமெனக்குவேளையறிந்தேயுதவ
தாண்டுமயிலேறிவருஞ்சண்முக வேலாயுதனே ௬௮

உன்னடியார்கூடவொருமித்திருந்தனது
பொன்னடியைக்காண்பதெக்காட்புனித வேலாயுதனே ௬௯

வஞ்சமடமாதின்மயக்கம்கலக்கேறி
நெஞ்சமலைபாய்வதிறுத்தும் வேலாயுதனே ௭௰

கண்வலைவீசிக்கருத்தைக்கவர்ந்திழுக்கும
பெண்கவலைதீரவருள்பெருமான் வேலாயுதனே ௭௧

வஞ்சகமெனுமபாம்பின்வாய்த்தேரையாகாம
வெஞ்சகத்துன்பத்தைநிறுத்தும் வேலாயுதனே ௭௨

வித்தையெல்லாங்கற்றாலும்வெகுளிமிகவிட்டாலும்
சித்தசுத்தமில்லார்க்குச்சுகமோ வேலாயுதனே ௭௩

ஆர்புகழ்ந்துமாறிழந்துமாவதென்னவென்றனது
பேர்புகழ்ந்துசிறப்பார்பெரியோர் வேலாயுதனே ௭௪

மாறுவிப்பிரித்தன்மனைவியணைக்காணும்பொன்
குருசிபுனைக்கணைவுணர்வருள் வேலாயுதனே-௭௫
கவலைக்கடன்முழ்கிக்கலங்கிடாம்
தவலோகத்திருவடியைத்தந்தருள வேலாயுதனே-௭௬
அஞ்சுகலைபயனவர்க்குவாழ்வுதலைபாகவந்தோய்
நெஞ்சுமலைசெட்டிசெருங்கிர்த்திகை வேலாயுதனே-௭௭
கல்லின்வலியமனக்கனிக்குருகிநின்பதத்தை
எல்லும்பகலுந்துதிக்கவாசை வேலாயுதனே-௭௮
மாயப்பிரபஞ்சமயக்குமெனுங்கடலிற்
சோயாமனிக்கருடன்சேரற்றும் வேலாயுதனே-௭௯
கார்த்திகையிலுன்பதத்தைக்கண்டுதெரிசித்தோர்க்கருள்
சித்தியுடன்பதவிசேர்க்கும் வேலாயுதனே-௮௰
சஷ்டியிற்சத்துருவைச்சங்கரித்தவன்பருக்கு
இஷ்டசித்திதரும்பெருமானை வேலாயுதனே-௮௧
வெள்ளிவிரதம்விருப்பித்துதிப்பார்க்குத்
தள்ளுமயிலேறிவந்தசுகம் வேலாயுதனே-௮௨
எழுலகத்தோர்தமெண்டத்தாண்குலட்சம்
வாழுமுயர்காழ்வெழுப்பலாரும் வேலாயுதனே-௮௩
துன்பமற்றிச்சுகந்தருவாயெனுமன்பு
அன்புகொண்டேநீயுமறியாயோ வேலாயுதனே-௮௪
இன்பமாய்நின்றவுனைவிரசபகலாய்த்துதித்துத்
துன்பமெனக்கேனோசொல்லும் வேலாயுதனே-௮௫
சண்முகனேயென்றுடையசஞ்சலத்தையகற்றிக்
கண்மணியினுன்னருளைக்காட்டும் வேலாயுதனே-௮௬
ஏழைமுகம்பார்த்திரங்கிரட்சித்தருள
வேழமயிலேறிவிளங்கும் வேலாயுதனே-௮௭
என்முகத்தைப்பார்த்துமனமிரங்கிவந்தருள
உன்முகம்போல்வேறுமெனக்குண்டோ வேலாயுதனே-௮௮
தீராவியாதியெல்லாந்திருநீற்றினாலகற்றிப்
போராசைநின்றேபெண்பிணிதீர் வேலாயுதனே-௮௯
எக்கவியாதிகளுமில்லாமற்காத்தருளச்
சிக்கையினும்பண்டிதனாத்தகடேன் வேலாயுதனே-௯௰
வஞ்சனையும்பில்லிகழுமாரணஞ்செய்வோரை
நெஞ்சம்பிளந்தவிழநினைக்கும் வேலாயுதனே-௯௧
எத்தனைநாளிந்தவிக்கண்டனிலுழல்வேன்
சித்தமிரங்கியென்பாற்றிரும்பும் வேலாயுதனே-௯௨
சஞ்சலத்தினின்றுதவிக்குமடியேனையன்பா
டஞ்சலெனவந்தருள்செய்யையா வேலாயுதனே-௯௩
கஞ்சமலமென்றுனைதுதிக்கத்திறந்தாதேயிருந்தாற்
சலியாதோநின்னடியார்சண்முகா வேலாயுதனே-௯௪

நம்புமடியவரைநழுகவிட்டுநீயிருந்தா
லம்புவியிலுன்னடியார்காண் வேலாயுதனே-௬௫

பொல்லாதபிள்ளையெனப்பெற்றவட்கொள்ளாதுபோ
லெல்லார்க்குந்தாயாநீயிரங்காய் வேலாயுதனே-௬௬

நொந்தவியாதிகளின்கொடுமையகற்றுவிடிலோ
நந்தமெனைநம்புவார்யார்சாமி வேலாயுதனே-௬௭

பரமகுருவானபண்டிதனார்தொண்டர்தமை
நிரமா[illegible]பதியெங்கணசெய்யும் வேலாயுதனே-௬௮

உ[illegible]மைபென்றமிழ்க்குலகமறிந்திருக்க
என்னை[illegible]காவாவிடில்யாரிகழார் வேலாயுதனே-௬௯

[illegible]திரும்பிமுகம்பார்த்துனது
பக்க[illegible]ன்[illegible]ரவுங்கண்பாரும் வேலாயுதனே ௭௰

ஆறுமுகமேபோலெனக்கேயாறுதலைசெய்தருள்
வேறுமுகமொன்றினையும்வேண்டேன் வேலாயுதனே ௭௧

தஞ்சையிலேசெஞ்சரணச்சதந்தைகவிதெனவே
கொஞ்சிடேஞ்செய்யுங்குருபர வேலாயுதனே-௭௨

சாந்தாபுரியகனிற்கருகூலநாதன்பா
லிருந்துவிளங்குமெங்களிறைவா வேலாயுதனே-௭௩

வேலுமயிலும்வாழிவிளங்குமடியர்வாழி
ஞாலமெதுவாழிநல்லோர்வாழி வேலாயுதனே-௭௪

கொண்டாயுதமவாழிசேவற்கொடிவாழிதினங்
கொண்டாடுவோர்வாழிகுருவும்வாழி வேலாயுதனே-௭௫

கலித்துறை.

வாரார்பகைக்கிறுறவோர்பகைக்கிவுலகிலுள்ளோர்
ஆரார்பகைக்கினுறுவுமஞ்சேனவுணர்குலத்தை
வேரோடறுத்துவின்னோறாக்காக்கவிசாகனருட்
சீராருமவேலுமயிலுமுண்டே துணைசெய்வதற்கே

பொல்லாதவஞ்சக்கயவரெனையும்பொருளமையினுல்
சொல்லாற்றயமாக்குவார்நாவைத்துணிக்கநித்தம்
பல்லோர்புகழ்சாந்தாபுரியில்பவனிவரும்
வல்லாளனேமுருகாமயிலேறியிங்ஙனம்வந்தருளே

வெண்பா,

சண்முகனைக்கண்டுசரணங்கனிற்பணிய
தண்மலர்கொண்டுமிகத்தி[illegible]னித்தேன் பண்மொழிசேர்
வள்ளிதெய்வானைமயில்வேலுடன்வந்தான்
உள்ளிடர்கள்போச்சேயொழிந்து.



## பஜனம்.



ஏரகமேவியபோதகமேயருள்
எங்குபமிலைறக்கருள்தாரமே
வேலாயுதாசக்திவேலாயுதாவேலாயுதா
வெற்றிவேலாயுதமூர்த்திசிவசக்திசூலாயுதகீர்த்தி
மகாகணபதிகுருசரணம்
மனமகிழ்ந்துதந்தருள்கருணம்
அரியோமரகாசரவணதேவா
ஆறுமுகனேயெனக்கருடாரீயோ
சிவாயநமோகுருமுருகனே
சீர்தருந்திருமால்மருகனே
சிவசிவசங்கரர்பாலனே
சிரகிரிமேவியவேலனே
குமாரகுருபரநாதனே
அமரர்தொழுந்திருப்பாதனே
சங்குசக்ரகோதண்டபாணி
மருமகனுயதெண்டாயுதபாணி
குமாரகுருபரமுருகேசா
சமாரசரவணபவநேசா
சரவணபவனேசரவணபவனே
சங்கரசிவசிவசரவணபவனே
சண்முகவேலாமுருகா
சண்முகவேலா
ஆனந்தமுருகனே அன்புடன்றுதிக்கு
மானந்தம்பிரமானந்தம்
அரிமருகாமுருகாகிருபாகரா
அருடரவேவருவாய்
குருவாய்தினம்சரவணபவசிவ
குருபரமுருகையா



## மங்களம்.

இராகம் - [illegible]

பல்லவி,

மங்களம் வடிவேலருக்கு மங்களம் ஜெய
மங்களம் வடிவேலருக்கு மங்களம்

அநுபல்லவி

இலகுங் குறவள்ளியர்க்குந் தெய்வானைமுருகருக்கும்
ஐங்கரனும் வல்லபைக்கும் ஆதிகயில்வாசனார்க்கும் மங்

சரணங்கள்

சேவற்பதாகையர்க்குந் தென்காங்கேயவேலவர்க்கும்
மூவர்க்கும் முருகர்க்கும் முத்திவடிவானவர்க்கும் மங்

பார்ப்பதிசுதனுக்கும் முனிவல்லிபிம்பனுக்கும்
சிறுமுனிவர்தேவருக்குஞ் சிறந்தவீரபாகுவுக்கும் மங்

அஞ்ஞானசக்கபதிக்கும் அயன்விஷ்ணுலட்சுமிக்கும்
என்னையாள் குருநாதருக்கும் ஏகபராயோகருக்கும் மங்

அருணகிரிநாதருக்கும் ஆதிஅகத்தியர்க்கும்
தரணியிற்பொய்யாமொழிக்கும் சங்கநக்கீரனுக்கும் மங்

ஆறுதலத்துறையும் ஆறுமுகசரவணபவனுக்கும்
குறமிக்குதினையென்றும் கொண்டாடுமன்பருக்கும் மங்

சிவசுப்பிரமணியசுவாமிகீர்த்தனைகள்

முற்றுப்பெற்றது.

